# VBC யின்

# பாட் ஆஃப் கோல்டு

## இவ்விழாக் காலத்தில் மாதாந்திர சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து பல வியப்பூட்டும் பரிசுகளை வெல்ல ஓர் அரிய வாய்ப்பு!




உம்மிடி குழுமத்தின் ஓர் அங்கமான **VBC** 1900லிருந்து பல குடும்பங்களுக்கு அதன் டிசைன்கள், தரம் மற்றும் நேர்மை ஆகியவற்றின் மூலம் புன்னகையையும் பொன்னகையையும் அளித்துள்ளது. இந்த விழாகாலத்தில் **VBC யின் 'பாட் ஆஃப் கோல்டு'** ரூ. 300, ரூ. 500, ரூ. 1000, ரூ. 1500 மற்றும் ரூ. 2000 என்ற மாதாந்திர தவணை திட்டத்தை அளிக்கிறது. **இதில் நீங்கள் உறுப்பினர் ஆவதன் மூலம் 100 சவரன்கள் மதிப்பு வரையிலான தங்கத்தை வெல்லும் ஓர் அரிய வாய்ப்பினை நீங்கள் பெறுகிறீர்கள்.**

**ஆகவே, இன்றே பதிவு செய்து கொள்ளுங்கள். கண்ணைக் கவரும் ஒரு பரிசினை தேர்ந்தெடுத்துச் செல்லுங்கள்.**

மேலும், வைரங்கள், பிளாட்டினம் ஆகிய நகைகளில், செய்கூலி, பழுதுபார்த்தல், பாலிஷ் மற்றும் மதிப்பீடு ஆகிய கட்டணங்களில் வியப்பூட்டும் தள்ளுபடியும் உண்டு.



SINCE 1900




## VBC Jewellery

*House of Vummidi*

DIAMONDS. PLATINUM. GOLD. SILVER

**பனகல் பார்க்,**
11-B, நாகேஸ்வரராவ் சாலை, தி. நகர், சென்னை 600 017.
தொலைபேசி எண்கள் : 2434 2407 /6297.

**78, G.N. செட்டி சாலை**
(ஹோட்டல் ரெசிடென்ஸிக்கு எதிரில்), தி. நகர், சென்னை 600 017.
தொலைபேசி எண் : 2822 9556/9560

www.vbcjewel.com

* சிட்டி பாங்க் EMI வசதியைப் பெறலாம்
* தங்க நகை சேமிப்புத்திட்டத்திற்கு எலக்ட்ரானிக் கிளியரன்ஸ் சேவை (ECS) வசதி உண்டு

# கை கொடுப்போம் வாருங்கள்...

கடற்கோளால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவும் பொருட்டு, பிரதமர் நிவாரண நிதிக்கு, 'கல்கி' ஒரு லட்சம் ரூபாய் வழங்கியுள்ளது. கல்கி நிறுவன ஊழியர்களும் தங்களால் இயன்ற தொகையைத் தர முன்வந்துள்ளனர். தொண்டுள்ளம் கொண்ட அன்பர்கள் அனைவரும், பின் வரும் அமைப்புகள் மூலம் நிதியுதவி செய்ய உடனே முன் வர வேண்டும்:

- 'The Prime Minister's National Relief Fund'
  Prime Minister's Office,
  South Block, New Delhi - 110 011
  *(செக் மற்றும் டிடி மட்டும்)*

- 'Chief Minister's Relief Fund
  The Joint Secretary to Government, Treasurer,
  Finance Department,
  Secretariat,
  Chennai - 600 009
  *(செக் மற்றும் டிடி மட்டும்)*

- 'தினமலர் கடல் கொந்தளிப்பு நிவாரண நிதி'
  தினமலர், டி.வி.ஆர். ஹவுஸ்,
  தினமலர் அவென்யூ, மதுரை - 16
  *(செக் மற்றும் டிடி மட்டும்)*

- 'The Hindu Relief Fund'
  Kasturi Buildings,
  859, Anna Salai,
  Chennai - 600 002
  *(செக் மற்றும் டிடி மட்டும்)*

- 'Coastal Calamity Fund'
  C/0. Indian Express,
  Express Estates,
  Chennai - 600 002

- 'The Tsunami Relief Fund' Sun Tv,
  Post Box No: 1481
  Chennai - 600 018
  *(செக் மற்றும் டிடி மட்டும்)*

- 'Vasan Charitable Trust'
  ஆனந்த விகடன்,
  757, அண்ணா சாலை,
  சென்னை - 600 002

- குமுதம் வாசகர்கள் 'சுனாமி' நிவாரண நிதி
  தபால் பெட்டி எண்: 2592,
  சென்னை - 10

உங்கள் உதவிகளை நேரிடையாக பின்வரும் வங்கிகளின் கிளைகளிலும் செலுத்தலாம்.

- ஸ்டேட் பேங்க் ஆஃப் இண்டியா
- சென்ட்ரல் பேங்க் ஆஃப் இண்டியா
- யூனியன் பேங்க் ஆஃப் இண்டியா
- தேனா வங்கி
- சிண்டிகேட் வங்கி
- கார்ப்பரேஷன் வங்கி
- பேங்க் ஆஃப் இண்டியா
- இண்டியன் ஓவர்ஸீஸ் பேங்க்
- பஞ்சாப் நேஷனல் பேங்க்
- இந்தியன் வங்கி
- அலகாபாத் வங்கி
- சிட்டி பேங்க்

- மணியார்டராக அனுப்பப்படும் நிவாரண நிதியுதவிக்கு, கமிஷன் கிடையாது.
- பிரதமர் மற்றும் முதல்வர் நிவாரண நிதியாக வழங்கப்படும் தொகைக்கு 100% வருமான வரி விலக்கு உண்டு.
- டி.டி.. எடுப்பவர்கள் கமிஷன் செலுத்த வேண்டாம்.



▣ தற்போதைய சூழ்நிலை மற்றும் எதிர்பாராத விளைவுகளைக் கருத்தில் கொண்டு சந்தேகத்துக்கு இடமில்லாத புதிய மடாதிபதியை உடனே நியமித்திட வேண்டும். பீடத்தின் பெருமையை அப்போதுதான் காப்பாற்ற இயலும்.
சென்னை, வி.எஸ். அனந்தராமன்

▣ அறுபதுகளில் நான் சென்னையில் பணிபுரிந்து கொண்டிருந்தேன். மாலை நேரங்களில் ராஜாஜியும் சா.பா. சுப்பராவும் கடற்கரை அருகில் அகில இந்திய வானொலி நிலையத்துக்கு முன்புறம் ஒரு ஃபியட் காரின் பின் இருக்கையில் அமர்ந்து காற்று வாங்கிக் கொண்டிருப்பார்கள். அவர்களிடம் சென்று பல நாட்கள் நாங்கள் உரிமையோடு பேசி மகிழ்ந்திருக்கிறோம். மிகவும் எளிமையாகப் பழகுவார். மறக்க முடியாத நாட்கள்.
உடுமலைப்பேட்டை, தி.குமாரராஜா

▣ ராமர் போல் வனவாசத்தில் இருப்பதாகக் கூறும் சதுர்வேதி பற்றிய கேள்விக்கு, தராசுவின் பதில் 'நச்' சென்றிருந்தது.
திருவாரூர், ஆர்.ராமசுப்ரமணி

▣ அந்நிய நேரடி முதலீட்டின் விளைவாக ஏற்படப் போகும் சாதகங்களை விட... பாதகங்களே அதிகம் என ஆணித்தரமாக துணிச்சலுடன் கூறிய தலைங்கம் அட்சரலட்சம் பெறும்.
நெய்வேலி, எஸ்.கண்ணன்

▣ 'இனி இவர்களின் ராஜ்யம்' படித்தேன். அடுத்த தேர்தலைப் பற்றி யோசிப்பவர் அரசியல்வாதி. அடுத்த தலைமுறையைப் பற்றி சிந்திப்பவரே தேசியவாதி. அது இதுதான் போலும்.
மணவாள நகர், பொன். இளவேற்கோ

▣ கிரிக்கெட் ஆட்டத்துக்குத் தரப்படும் முக்கியத்துவத்தில் ஒரு பகுதியாவது மற்ற ஆட்டங்களுக்குத் தரப்பட வேண்டும் என்ற பெரும்பான்மையோரின் மன ஓட்டத்தை வெளிப்படுத்தியிருந்தார் இளமைச் சூறாவளி ராதா நாராயணன்.
பூனா, சி.மகேஷ்

# ...ரும்பத் திரும்பத் திரு...



▣ தேவநாதன் எழுதிய 'அதிபந்தன் கூண்டு' சிறுகதை மிகவும் சிறப்பாக இருந்தது. கடல் பயணத்தில் என்னையும் அழைத்துச் சென்றது.
காமநாயக்கன்பாளையம், மா. மோகனராசன்

▣ 'பொம்மை'யில் வெளியான எம்.ஜி.ஆரின் பேட்டியைப் படித்தபோது, அந்தக் கால நடிகர்களிடையே இருந்த கண்ணி

யமும், கட்டுப்பாடும், அனுசரணையான போக்கும், பெருந்தன்மையும் இக்கால நடிகர்களிடையே இல்லாமற் போய்விட்டதே என பெருமூச்சுவிட்டு ஏங்கினோம்.
வேலூர், வே.ந.கதிர்வேல்

✉ டாக்டர் ராமதாஸ் போன்ற தமிழ் ஆர்வலர்கள் (?) அடிக்கும் கூத்துக்கு, கமல் பேசாமல் 'பெயரில்லாத படம்' என்று டைட்டில் வைத்து விடலாம்.
ஸ்ரீரங்கம், எஸ்.கௌரிலக்ஷ்மி

✉ ராஜாஜி பற்றிய கல்கியின் கட்டுரையைப் படித்ததும் அவரைப் போன்ற உத்தமர்கள் இன்று இல்லையே என்ற ஏக்கம் ஏற்பட்டது.
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்

✉ 'சேமிப்போம் வாங்க' என்று கல்கி சொன்ன வழிகள் 'அடடே' போட வைத்தன.
சென்னை, டி.ஜி. நாராயணராவ்



✉ ஒரு புறம் ஊழல் வழக்குகள்; மறுபுறம் ரயில் விபத்துகள் என இரண்டிலும் மாட்டிக் கொண்டு ரயில்வே அமைச்சர் லல்லு விழி பிதுங்குவதை கார்ட்டூன் மூலம் படம் பிடித்தது அசத்தல்!
திருவாரூர், டி.முருகேசன்

✉ 'விஜயேந்திரர் என்ன செய்ய வேண்டும்?' கட்டுரை வாசித்தேன். குற்றவாளி என்று நீதித்துறையால் அடையாளம் காட்டப்பட்டு, ஜாமீன்கூட மறுக்கப்பட்ட 'துறவி'யைத் தூக்கி நிறுத்துகிற வேலைக்குப் பின்னே இருப்பது ஆன்மிகமா? வர்ணாசிரமமா?
மயிலாடுதுறை, இரா. இராஜேந்திரன்

✉ 'சங்கீத தர்மம்' என்ற தலைப்பில் எம்.எஸ். பற்றி அருமையாக உணர்ச்சி ததும்ப எழுதியுள்ளீர்கள். திரும்பத் திரும்ப படிக்கத் தூண்டும் வரிகள்.
எட்டயபுரம், கே.கே.ராஜன்



**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# கடல் கொண்ட

சுனாமி! ஒட்டுமொத்த இந்தியர்களையும், கட்டாயமாய்க் கற்றுக் கொள்ள வைத்துவிட்டது இந்தக் கில்லர் வார்த்தை!

சுமத்ரா தீவின் அருகே கடலடியில் நிகழ்ந்த மெகா பூகம்பத்தின் அதிர்வுகளை அதே நேரத்தில் உணர்ந்த மக்கள், சுனாமி அலைகளின் தாக்குதல் தமிழகக் கரையோரங்களில் ஆயிரக் கணக்கில் உயிர்களைக் குடித்திருக்கும் செய்தியைப் பல மணி நேரம் தாமதமாகத்தான் தெரிந்து கொண்டனர். நிவாரணம், மீட்புப் பணி இரண்டிலும் தொடக்கத்தில் கொஞ்சம் திணறிய அரசு, பின்னர் விறுவிறுவென்று வேகமெடுத்து களத்தில் குதித்தது. அரசுக்கும் முன்பாக ஆதரவுக் கரம் நீட்டியவர்கள் தன்னார்வத் தொண்டர்கள். குமரிக் கரையோர கிராமங்களில் குவிந்து கிடந்த உடல்களை மீட்டு, மீதமிருந்த மக்களுக்கு உணவும் மருந்தும் உடனடியாகத் தந்தவர்கள் ஆர்.எஸ்.எஸ், தமிழ்நாடு முஸ்லீம் முன்னேற்றக் கழகம், கிருஸ்தவ சபை போன்ற அமைப்புகளைச் சேர்ந்த தன்னார்வத் தொண்டர்கள். மதத்தைவிட மனிதம் முக்கியம் என்பதை நிரூபித்திருக்கிறார்கள்.

இயற்கைப் பேரழிவு என்பது ஓர் அதீத நிகழ்வு. அதில் மேலும் உணர்ச்சியூட்டும் விதமாக மீடியா நடந்து கொண்டது. குடி மக்களின் சாவில் அரசியல் பேதமும், உள்நோக்கமும் பாராட்டும் விதமாக செய்திகளை ஒருதலைப்பட்சமாக வழங்கின, கட்சி சார்புள்ள தொலைக்காட்சிகளும், பத்திரிகைகளும். இந்தப் போட்டா போட்டியில் மனிதத் துயரம் என்பதே இரண்டாம் பட்சமாகிவிட்டது! நாகையிலும், வேளாங்கண்ணியிலும் நாம் பார்த்த துயரம் கொஞ்சநஞ்சமல்ல...

கடலின் வெகு அருகில் மீனவர் காலனிகளில் வசித்து வந்த ஆயிரக் கணக்கான மீனவக் குடும்பங்களின் கதி என்னவென்றே தெரியவில்லை. நாகையிலும், கடலூரிலும் சுவடு தெரியாமல் மணல் மேடாய்ப் புதைந்து கிடக்கும் சின்னஞ்சிறிய மீனவக் கிராமங்கள் பலவற்றை, நமது ராணுவ வீரர்கள் தோண்ட ஆரம்பித்தால், மேலும் துயரங்கள் தெரியவரும் என்று அகதிகளாய் அழுகிறார்கள் தப்பிப் பிழைத்த மக்கள்.

கடல் நீர்ப் பரப்பிலிருந்து இரண்டு பனை மர உயரத்துக்கு மேலெழும்பி, மிக மிக அதிக விசையுடன் ஊருக்குள் புகுந்தது கடல் நீர். இவ்வாறு புகுந்த நீர், வேளாங்கண்ணி பேராலயம், பேருந்து நிலையம், கடைவீதி என எதனையும் விட்டு வைக்காமல் அலசி எடுத்தது. கடலில் நீராடிக் கொண்டிருந்த பக்தர்கள், கடற்கரை மற்றும் அதன் அருகில் உலவிக் கொண்டிருந்தவர்கள் என்றில்லாமல், ஊருக்குள் இருந்த மக்களில் பலரும் கடல் நீரில் அடித்துச் செல்லப்பட்டனர். கால்நடைகள் நீரில்



மிதந்தன.

குவியல் குவியலாக உடல்களை அடக்கம் செய்த கோரத்தை தமிழகம் கண்டது. அணுகுண்டுச் சோதனை முதல் அக்னி ஏவுகணை வரை அறிவியல் வளர்ச்சியில் எவரெஸ்ட் உயரத்தில் இருக்கும் நாம், சுனாமி அலைகள் விஷயத்தில் எப்படிக் கோட்டை விட்டோம் என்பது தான் இப்போதைய கேள்வி? இதுதான் நமக்கு மோசமான முதல் அனுபவம் என்று சமாதானம் சொன்னாலும், 'கடற்கோள்' என்பது நமக்குப் புதிதல்ல, தமிழகத்தின் தென்முனைப் பகுதியை பல நூற்றாண்டுகளுக்கு முன்பே கடலுக்குத் தாரை வார்த்திருக்கிறோம் என்கிறார்கள் தமிழறிஞர்கள். அறிவியல் அறிஞர்களோ, 'சுனாமியின் தீவிரத் தாக்குதல்களைப் பலமுறை சந்தித்த பசிபிக் கடலோர நாடுகள், நாற்பதுகளின் இறுதியிலேயே தங்களுக்காக சர்வதேச சுனாமி தகவல் மையங்களை அமைத்துவிட்டார்கள். நாம் அலட்சியமாக இருந்துவிட்டோம்' என குற்றம் சாட்டுகிறார்கள்.

கடலடி பூகம்பத்தால் மட்டுமல்ல, எரிமலை வெடிப்பாலும் தோன்றும் சுனாமியை, கரைகளைத் தாக்கும் முன்பே கண்டுபிடித்து அறிவித்து விட முடியும். அதற்கான அலை உணர்வுக் கருவிகளை கடலடியில் நிலை நிறுத்தி, அது தரும் சிக்னல்களை செயற்கைக் கோள் வழியே நொடிக்கு நொடி பெற முடியும் என்பது எத்தனை பெரிய வரப் பிரசாதம்! இந்த தேசியப் பேரழிவிலிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டிய பாடங்கள் நிறைய உண்டு என்றாலும், உடனடியாகச் செய்ய வேண்டியது, கிழக்கு மற்றும் மேற்குக் கடற்கரைகளில் சுனாமி முன்னறிவிப்பு மையங்களை நிறுவுதல். அடுத்த கட்டமாக, சுனாமியால் பாதிக்கப்பட்ட நாடுகளின் அனுபவங்களை, அவர்களின் பாதுகாப்பு நடவடிக்கைகளைப் பகிர்ந்து கொள்ளுதல். மீனவர் என்றாலும் சரி, மீனவரல்லாதவர் என்றாலும் சரி, கடலோரக் குடியிருப்புகள் அமைக்கும்போது, மத்திய, மாநில சுற்றுச் சூழல் துறையின் நெறிமுறைகளையும், விதிகளையும் பின்பற்ற நடக்க வேண்டும். கடற்கரையிலிருந்து ஆயிரம் மீட்டர்களுக்கு அப்பால் கட்டடங்கள் கட்டப்பட வேண்டும் என்ற பெருநகர கட்டுமானக் கழகத்தின் முக்கிய விதியை, அரசாங்கம் உட்பட தமிழகத்தில் யாரும் பின்பற்றுவதாகத் தெரியவில்லை. இந்த விதிகளை நாம் பின்பற்றியிருக்கும் பட்சத்தில் உயிர்ச்சேதம், பொருள் சேதம் இரண்டும் இன்னும் குறைந்திருக்கும் என்பது, கட்டுமானத் துறையில் பணிபுரிந்து ஓய்வு பெற்ற பொறியியல் நிபுணர்களின் கருத்து. சுனாமியின் தாக்குதல் நிறைந்த பசிபிக் கடலோர நாடுகளில், அதன் சீற்றத்திலிருந்து தப்பிக்கும் விதமாக கட்டடம் கட்டும் தொழில் நுட்பத்தையும் கண்டறிந்திருக்கிறார்கள். இத்தகைய பாதுகாப்பு முறைகளை, பசிபிக் சுனாமி தகவல் மையம் பட்டியல் போட்டுச் சொல்லித் தருகிறது.

• கடலடி பூகம்பம், அல்லது கடலோர பூகம்பம், கடலடி எரிமலை வெடிப்பு போன்றவை நிகழ்ந்தால், சுனாமிக்கான முதல் எச்சரிக்கையாகக் கொள்ள வேண்டும்.

• நீங்கள் வசிப்பது தாழ்வான கடற்பகுதி என்று அரசால் அறிவிக்கப்பட்டிருந்தால், உடனடியாக பத்து கிலோ

# 2012-ல்

"டிஸம்பர் 15ம் தேதி அஸ்ஸாமில் பூகம்பம் ஏற்படக் கூடும்" என்று கணித்து 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகையில் ஒரு கட்டுரை வந்தது. உடனே நான் டிஸம்பர் 17ம் தேதியிலிருந்து 20 தேதிக்குள் பூகம்பம் தென் மேற்கு சீனப் பகுதியில் வரக்கூடும் என்று அந்தப் பத்திரிகைக்கு கடிதம் எழுதினேன். என்னிடம் உலக பூகம்பங்களைப் பற்றிய முழுப் பின்னணி விவரங்களும் இல்லாததால் 26ம் தேதி சுமத்திரா தீவில் நடக்கும்' என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியவில்லை." என்கிறார் எஸ்.ராமச்சந்திரன். இவர் புவியியல் ஆராய்ச்சியாளரோ அல்லது



# பாகிஸ்தான் இருக்காது!

வானிலை நிபுணரோ அல்ல! பரம்பரையாக ஜோதிடர் குடும்பத்தில் வந்தவர். இப்போது கட்டடக் காண்ட்ராக்டர். ஆனால் நவக் கிரகங்களின் நடமாட்டமே இயற்கையின் சாதாரண மற்றும் விபரீதச் செயல்பாடு களுக்குக் காரணம் என்ற ஆணித்தரமாக வாதிடுபவர். அந்த அடிப்படையில் கடந்த பல வருடங்களாக ஆராய்ச்சி செய்து வருகிறார். இவர் சொன்ன பல கணிப்புகள் நடந்திருக்கின்றன.

"மேஷ ராசியில் சனி பகவானும், குருவும் பயணிக்கத் துவங்கிய கால மான 1999 முதல், துலாம் ராசியில் சனி பகவான் பயணித்து முடிகிற 2006ம் ஆண்டு வரை, உலகத்துக்கே போதாத காலம். இழப்புகளும் மிக அதிகமாக இருக் கும். 2006லிருந்து 2012 வரை ஒரு யுகசந்தியின் துவக்க காலம். இது குறித்து வேதவியாசர், பிரம்மேந்திர சுவாமிஜி, மற்றும் நாஸ்ட்ரடாம்ஸ் கூடச் சொல்லியிருக் கின்றனர். கலியுகத்தின் ஒரு அந்தரம் (பாகம்) முடிந்து மறுபாகம் துவங்கும் வருடம் 2006. அதன் பிறகு இயற்கை ஓரளவு நம்மீது கருணை காட்டத் துவங்கும். ஆனால் 2012ல் ஏற்படும் பூகம்பம் மற்றும் சுனாமி யினால், துருக்கியிலிருந்து பாகிஸ்தான் வரை கடலில் மூழ்கக் கூடும் . அதன்பிறகு பல காலம் மனிதனுக்கு இயற்கை உதவக் கூடுமே தவிர, உக்கிரதாண்டவம் ஆடுவது மிகக் குறைவாகவே இருக்கும்" என்கிறார் ராமச்சந்திரன்.

சந்திப்பு : ப்ரியன்
படம் : ராஜன்

---

மீட்டர்களுக்கு அப்பால் இடம் பெயர்ந்து வந்துவிட வேண்டும்.

• உங்கள் பகுதியில் ஏற்படும் கடலடி பூகம்பத்தின் ரிக்டர் அளவுகள், ஏற்கெனவே நிகழ்ந்ததைக் காட்டிலும் ஒரு ரிக்டர் அதிகமென்றாலும், உடனடியாக வெளியேறிவிடவேண்டும்.

• சுனாமி ஒரே ஒரு அலை அல்ல. அவை தொடர் அலைகள். எனவே சில நிமிடங்கள், பல நிமிடங்கள் இடைவெளி யில் கூட, தாக்கும் இயல்பு கொண்டவை. ஆனால் பெரும்பாலான சுனாமிகள் தொடர் தாக்குதல் நடத்தும். செங்குத்தாக எழுந்து தாக்குவதால் மனிதர்களையும், பொருள்களையும் தூக்கி வீசும்.

• சுனாமி அலைகள் கரையை நெருங்கி வந்து தாக்கும் முன்பு கடல் மட்டம் திடீரென உயரவோ, உள்வாங்கவோ செய் யும். கடல் மட்டம் வழக்கத்துக்கு மாறாகத் தாழ்ந்தால் அலட்சியம் காட்டக் கூடாது. அடுத்த சில மணித் துளிகளில் சுனாமியின் தாக்குதல் நிச்சயம் (திருச் செந்தூர் கடல் உள் வாங்கியது விதி விலக்கு).

• சிறு சுனாமிகள், கொந்தளிப்போடு நின்றுவிடலாம். இதை மனத்தில் கொண்டு, அடுத்தடுத்துவரும் சுனாமி அறிவிப்புக்களை, ஒரு போதும் அலட் சியப்படுத்திவிடாதீர்கள்.

• சுனாமி ஆபத்தின்போது உங்களைக் காக்க நடவடிக்கை எடுக்கும் அரசு யந்திரத்துக்குக் கட்டுப்பட்டு நடப்பது, குடிமக்களாகிய உங்கள் உயிரைக் காக்கும்.

நமக்கு, இன்று வரை இயற்கை பேரழிவு மீட்புப்படை என்பது இன்னும் கனவாகவே இருக்கிறது. இப்போதைய சுனாமிப் பேரழிவு எதிர்காலத்திலும் தொடரலாம். நமது மாபெரும் முப்படை யில், இயற்கைப் பேரழிவுகள் மீட்புப் படைக்கான பிரிவைத் தொடங்கிவிடுவதும் கூட இன்றையத் தேவை. இன்னொரு பக்கம் கடலோரங்களில் அமைக்கப் பட்டிருக்கும் அணுமின் நிலையங்களின் பாதுகாப்பு பற்றி பயம் மக்களைப் பீடித் திருக்கிறது. ரஷ்யாவின் சொர்னோபில் அனுபவம் உலக சமுதாயத்துக்கு ஒரு படிப்பினையாக இருந்து வரும் நிலையில், இந்திய அணு உலைகளின் விரிவாக் கத்தை அடியோடு நிறுத்திவிடுவது குறித்து அரசும், மக்களும் தீவிரமாகச் சிந்திக்க வேண்டும்.

- ஜெய்
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு
படங்கள் : இரா.சண்முக சுந்தரம்

# வைர வானவில்

ஹாய் நான்தான் உங்க ஃபிரெண்ட் பாப்பு பேசறேன். காதலுக்கான சின்னம்- அந்தஸ்துக் கான அடையாளம் -இப்படி ஏகத்துக்கும் வர் ணிக்கலாம் வைரத்தை. இத்தகைய பெருமைக்குரிய வைரமானது ஆபரணங் களாக மாறி திடீரென ஓரிடத்தில் அணி வகுப்பு நடத்தினால் எவ்வளவு கண்கொள் ளாக் காட்சியாக இருக்கும்? அத்தகையதோர் காட்சியைக் காண வேண்டுமா? அப்படியா னால் நீ சென்னை நுங்கம்பாக்கம் காகனி டவர்ஸில இருக்கும் பாபாலால் டயமன்ட் ஜூவெல்லரிக்குத்தான் போக வேண்டும் என என் நண்பன் ஹின்ட் கொடுக்க, உடனடியாக அங்கு செல்ல ஆயத்தமானேன்.

ஷோரூமிற்குள் அடியெடுத்து வைக்கும் போதே அங்கு நிலவும் ரம்யமான சூழ்நிலை, அன்பான வர வேற்பு, வாடிக்கை யாளரிடம் காட்டும் கனி வான அணுகு முறை ஆகியன கொஞ்சம் சூப்பராக இருக்கவே, மெல்ல அங்கு வந்திருந்த வாடிக்கையாளர்களிடம் பேச்சுக் கொடுத்தோம். முதலில் பேசத் தயங்கிய அந்தப் பெண்மணி,

"இவங்களோட ஸ்பெஷாலிட்டின்னு சொல்லணும்னா எல்லா வெரைட்டியை யும் தெளிவா பாக்குற மாதிரி அடுக்கி வச்சிருக்கிறதும், கொடுக்கற பணத் துக்கு வொர்த்தான பொருட்களை தர்றதும் தான். அது மட்டுமில்லாமல் விலையை தனி யாகப் பார்த்தால் அதிகமாத் தெரியும். ஆனால் இவர்களது வைரத்தின் தரத்துடன் ஒப்பிட் டுப் பார்த்ததில் விலை சரியாகவே தோன்றி திருப்தியும் அளித்தது. வைரத்தை பத்தி நுணுக்கமாகத் தெரியாத எனக்கு முதல் தடவை வந்தப்போ அதோ நிக்கறாரே அந்த சேல்ஸ்மேன் ரொம்பத் தெளிவா விளக்கி னாரு. அதுதான் என்னை ரொம்பவும் பாபா லால் ஜூவெல்லரி பக்கம் ஈர்த்துடுச்சு" என்று புன்னகைத்து விட்டு மீண்டும் செலக்ஷ னில் பிஸியாகி விட்டார்.

திடீரென 'தஸ்... புஸ்' என ஆங்கில வார்த் தைகள் என் காதுகளைத் தீண்ட சத்தம் வந்த பக்கத்தை நோக்கி கால்களை நகர்த்தினால், அங்கு உரையாடிக் கொண்டிருந்தவர்கள் இந்தியாவிற்கு வந்திருந்த அமெரிக்க சுற்று லாப் பயணிகள். ஏதோ ஃபோட்டோக்களை வைத்துக் கொண்டு ஒருவருக்கொருவர் சிலா கித்துப் பேசிக் கொண்டிருக்க, என்ன வென்று விசாரித்தால் தாங்கள் வெளிநாட்டு வைரங்கள் குறித்த தகவல்களைச் சேகரித்து வைத்திருப்பதாகவும், அவற்றுடன் இந்த ஷோரூமில் இருக்கும் வைரத்தின் பண்பு களோடு ஒப்பிட்டு வாங்கிக் கொள்வதாகவும் இதில தங்களுக்கு பூரணத் திருப்தி இருப்ப தாகவும் கூறினர். மேலும், இவர்களிடம் நான், மற்றும் என் நண்பர்கள் சிலரும் சென்ற முறை வந்து வாங்கினோம். அவற்றை நாங்கள் அமெரிக்கா எடுத்துச் சென்று (Labல்) சோதித்துப் பார்த்ததில் இவர்கள் கூறியபடி தரம் மற்றும் விலை சரியாகவே இருந்தது. எனவே இம்முறையும் மீண்டும் வாங்க வந் துள்ளோம். அதெல்லாம் இருக்கட்டும். பாபா லாலை உங்களுக்கு அறிமுகப்படுத்தியவர் யார் என்று கேட்க, வேற யாரு? உங்க என்.ஆர் .ஐ.க்கள்தான்... சி....யூ" என்று கூறி விடை பெற்றனர்.



நடப்பதை உன்னிப் பாகக் கவனித்துக் கொண்டிருந் தார் ஒரு கம்பீர மான நபர். பார்ப்பதற்கு ஒரு வங்கி மானேஜர் தோற் றம். நேராக என் னிடம் வந்தவர், "இந்த ஜூவல்லரி யோட உரிமை யாளர் பிரனவ் மேத்தாவை எனக்கு ரொம்ப நல்லாத் தெரியும். எங்க குடும்பத்துக்கும் பாபாலாலுக்கும் இந்த ஷோரூம் ராட்டன் பஜார்ல இருந்தப்பவே நல்ல உறவு உண்டு. அதற்குக் காரணம், பாபாலாலோட நம்பகத்தன்மைதான். அதே போல இங்க வர்ற கஸ்டமர்களோட பட் ஜெட்டை வைத்து அணுக மாட்டாங்க. எல் லோரையும் சமமா நடத்தறதுதான் பாபா லோட ஸ்பெஷல்னு சொல்லலாம். காஸ்ட் வைஸ் பார்த்தாலும் பாபாலால் நியாயமான அணுகுமுறையை கடைபிடிக்கறாங்க. அத னால்தானோ என்னவோ எத்தனை பார்ட் னர்கள் வந்து போனாலும் தரம் குறையாம இருக்கு" என்று சர்டிஃபிகேட் கொடுத்துக் கொண்டிருந்தவரை அவருடைய பேரன் அழைக்க, "சரி. பார்க்கலாம் தம்பி..." என்று கூறிவிட்டு மருமகள் வாங்கிய வைர அட்டி கையை ஆசையுடன் பார்த்து ஆனந்தப்படு கிறார். அதிக ஆரவாரமற்ற, நெருக்கமற்ற, அமைதியான சூழ்நிலையில் அமைந்திருக் கும் பாபாலால் டயமண்ட் ஷோரூமிற்கு ஒரு முறை வருகை தந்தால் வைரத்தால் ஆன தோர் வானவில்லைப் பார்த்ததோர் திருப்தி ஏற்படுவது நிச்சயம்! சரி.. வரட்டுமா!

அன்புடன்,
பாப்பு

(வி-ம்)



# ஆலடி அருணா கொலை!

தமிழகம் ஏற்கெனவே சுனாமி, நில நடுக்கம் போன்றவற்றால் நிலை குலைந்து போயிருக்க, 2004 வருடக் கடைசி தினத்தன்று, முன்னாள் தமிழக அமைச்சரும், பழுத்த அரசியல்வாதியுமான ஆலடி அருணா கொடூரமான முறையில் கொலையுண்டது, மேலும் பல அதிர்வுகளை ஏற்படுத்தியிருக்கிறது.

கொலையின் முதற்கட்ட விசாரணையில் ஈடுபட்டிருந்த திருநெல்வேலி டி.ஐ.ஜி கோபாலகிருஷ்ணனிடம் இதுபற்றிக் கேட்டபோது மூன்று சந்தேகங்களை வெளிப்படுத்தினார்.

''சென்னை ரௌடி ஒருவர் கொலையில், இங்குள்ள ஒரு ரௌடி குரூப்புக்குப் பங்கு உண்டு. இந்த நெல்லை குரூப்புடன் அருணாவுக்குத் தொடர்பு உண்டு. இந்தக் குழு விரோதம் கொலையில் முடிந்ததா...?

ராஜீவ்காந்தி கொலையுண்டபோது கலவரங்கள் பல நடந்தன. ஆலடி அருணாவின் சொத்துக்களின் நாசத்துக்குக் காரணமாகச் சந்தேகிக்கப் பட்டவருக்கு, அருணா அமைச்சராக இருந்த காலத்தில் நிறைய தொல்லைகள் தந்ததாகவும் தெரிகிறது... இவ்வாறு தொல்லைக்கு உள்ளானவர் இக் கொடூரத்துக்குப் பொறுப்பா...?

ஆலடி அருணாவுக்குச் சொந்தமான பொறியியல் கல்லூரியைக் கட்டும்பொழுது பல தனியார் நிலங்களை அவர் வற்புறுத்தி வாங்கியதாகவும் குற்றச்சாட்டு எழுந்தது. இதன் அடிப்படையில் ஏதாவது விரோதத்தின் காரணமாக கொலை நடந்ததா? அல்லது வேறு ஏதேனும் காரணமா...? விரைவில் கண்டுபிடித்து விடுவோம்'' என்றார் தீர்க்கமாக!

''இந்தக் கொலைச் சம்பவத்தால் திருநெல்வேலியில் எவ்வித அசம்பாவிதங்களும் மேற்கொண்டு நடக்காது'' என்று உத்தரவாதமும் அளிக்கிறார்.

- நீலாவள்ளி

## வேண்டாம் இன்னொரு கொள்ளை!

கடல் கொண்ட கொள்ளை போதாதென்று, மனிதநேயம் தொலைத்த இடைத்தரகர்கள் அடிக்கும் கொள்ளை ஆரம்பிக்கக்கூடிய நேரம் இது. ஸுனாமி பெரு நாசத்தில் ஒவ்வொரு குடும்பத்திலும் உயிரிழந்தவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப, அத்தனை லட்சம் ரூபாய் வழங்கப்படும் என்ற தமிழக அரசின் அறிவிப்பு, கேட்பதற்கு நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால், அவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டாலும்கூட, அதில் எந்த அளவு பாதிக்கப்பட்டவர்களின் கைகளுக்குப் போய்ச் சேரும் என்பது கேள்விக்குறிதான். அரசு இயந்திரத்தின் வழி வழங்கப்படுகிற நிவாரணத் தொகைகளும், பொருள்களும் முழுமையாய்ப் போய்ச் சேர்ந்ததாக வரலாறே கிடையாது. தமிழக முதல்வர் மனம் வைத்தால் இந்த வரலாற்றை மாற்றி அமைக்கலாம்.

இதற்கு மிகச் சீரிய முறையில் திட்டமிடுவதும், அதனைச் செயல்படுத்துவதும் அவசியம். நிபுணர் குழு அமைத்து, நிவாரணத் தொகைக்கு மனுச் செய்வதை எளிமையாக்கி, பரிசீலனையைத் துரிதப்படுத்தி, பணப் பட்டுவாடா குறையின்றி நடக்க வழி வகுப்பது அசாத்தியம் அல்ல.

பிற நாடுளை ஒப்பு நோக்க, இந்தியாவில், தமிழகத்தில்



# கல்கி



2005 ஜனவரி 9
தாரண மார்கழி 25
மலர் : 63
இதழ் : 24




ஸுனாமியால் ஏற்பட்டுள்ள சேதம் குறைவுதான். ஆயினும், ஒருகணம்கூடக் கற்பனை செய்து பார்க்காத, எதிர்பாராத தாக்குதல் இது. எந்த விதத்திலும் இதற்கு நாம் தயாராக இல்லை.

கடலுக்கடியில் நிகழும் பூகம்பத்துக்கு ஸுனாமி என்று பெயர் என்பதும், ஸுனாமி எச்சரிக்கை வட்டம் என்பதாக ஒன்று உள்ளது என்பதும்கூட, இப்போதுதான் பலருக்குத் தெரிய வந்துள்ளது.

பெரும் விலையைக் கொடுத்து இந்த விஷயங்களை நாம் தெரிந்துகொண்ட பிறகாவது, ஸுனாமி குறித்த எச்சரிக்கையும் விழிப்புணர்வும் நமக்குத் தேவை.

ஸுனாமி எச்சரிக்கை வட்டத்தில் நம் நாடும் உறுப்பினராக ஆவன செய்யப்படுவது அவசியம் என்பதை, மத்திய அரசு உணர்ந்து நடவடிக்கைகள் எடுக்க ஆரம்பித்து விட்டது. ஆனால், இது மட்டுமே போதாது. இது போன்ற இயற்கைச் சீற்றங்கள் ஏற்பட்டால், அடுத்த வினாடியே தானியங்கு முறையில் நிவாரணப் பணிகள் தொடங்கப்பட்டு, தொடர்ந்து நடக்க ஓர் அமைப்பு ஆயத்த நிலையில் இருக்க வேண்டும். இத்தகைய disaster management system அமெரிக்கா, ஜப்பான் போன்ற நாடுகளில் உண்டு. நமது அரசு நிர்வாகத்தில் இல்லை. காவல் துறை, தீயணைப்புத் துறை, ராணுவம், சி.ஆர்.பி.எஃப், கடலோரக் காவல் படை போன்ற அமைப்புகள்தான் இயற்கைச் சீற்ற நிவாரணப் பணிகளிலும் ஈடுபடுத்தப்படுகின்றன. இவ்வமைப்புகளுக்கு ஏற்கெனவே தனிப் பொறுப்புகளும் இருக்கின்றன. எனவே ஸுனாமி, பூகம்பம், வெள்ளம், சூறாவளி போன்ற அதீத நிலைகளை எதிர்கொண்டு சமாளிக்கும் சிறப்புப் பயிற்சி இந்த அமைப்புகளுக்கு வழங்கப்பட வேண்டும்.

எந்தெந்த விதமான ஆபத்தை எந்தெந்த விதத்தில் ஒருங்கிணைந்து செயல்பட்டுச் சமாளிப்பது என்ற சிறப்புப் பயிற்சிகள் வழங்கப்படுமானால், இவற்றின் ஒட்டுமொத்த




செயல்பாடு, பெரு விபத்துக் காப்புப்படை ஒன்றை நிறுவியது போலவே ஆகிவிடும். அவ்வப்போது mock drill நடத்தி, அந்தப் படையின் திறனையும் தயார் நிலையையும் உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

எதிர்கட்சியினர், நிவாரணப் பணிகள் சென்று சேராத இடங்களைச் சுட்டிக்காட்டி, உடனே உதவி வந்து சேரத்தான் வழி வகுக்க வேண்டுமேயொழிய, வெறுமே குறை கூறி மக்களின் அதிருப்தியை அதிகரிக்கச் செய்யக் கூடாது.

பொதுமக்கள் பொருளும் பணமும் இயன்ற அளவில் தந்தால் போதாது. நேரடியாக பாதிக்கப்பட்டோருக்கு உதவத் தயங்கக் கூடாது. தங்கள் ஆடம்பரச் செலவுகளையும் அனாவசியச் செலவுகளையும் குறைத்துக் கொண்டு, ஸுனாமி நிவாரண நிதிக்கு வாரி வழங்க வேண்டும். நம்பகமான நிறுவனங்கள் ஏற்கெனவே பணம் சேர்க்கும் பணியைத் தொடங்கிவிட்டன. அவை மூலமோ, அல்லது நேரடியாக பிரதமர் அல்லது முதல்வரின் நிவாரண நிதிக்கோ தொகையை அனுப்பலாம்.

ஸுனாமி தாக்கிய தினத்தில் அடுத்த சில மணி நேரங்களுக்கு அரசு இயந்திரம் வெகு வேகமாக இயங்காமல் ஸ்தம்பித்துப் போயிருந்தது உண்மை. ஆனால் நடந்த தவற்றிலிருந்து பாடம் கற்காது போனால் அதற்கு மன்னிப்பே கிடையாது.

பிணக் காடாகிவிட்ட கடற்கரைப் பகுதிகளில் இனி தொற்றுநோய் பரவ ஆரம்பிக்கும். அதை நிகழ விடாமல் தடுப்பதும், மறுவாழ்வுப் பணிகளை போர்க்கால அடிப்படையில் மேற்கொள்வதும் அரசின் தலையாய கடமைகள்.

சர்வதேச சுகாதார அமைப்புகளின் உதவியையும், உள்நாட்டு மருத்துவ, மருந்து தயாரிப்பு நிறுவனங்களின் உதவியையும் தமிழக முதல்வர் கேட்டுப் பெற வேண்டும். நோய்த் தடுப்புக்கென ஒரு நிபுணர் குழுவும் புனர் வாழ்வுக்கென மற்றொன்றும் அமைத்து, தமிழகத்தை முதல்வர் மீண்டும் தூக்கி நிறுத்தட்டும். ○

# ஜனனம்

**நா**ம் அமர்ந்திருப்பது திரையரங்கா அல்லது அரசு வேலை வாய்ப்பு அலுவலகமா என்ற சந்தேகம்! டைட்டில் போடுவதில் தொடங்கி படத்தின் முடிவு வரை, எரியும் பிரச்னையாகத் தொடரும் 'வேலையின்மை'யை வைத்துக் கொண்டு விறுவிறுப்பாகப் படத்தைக் கொடுத்திருக்கிறார்கள்.

"வேலைவாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து கொண்ட இளைஞர்களுக்கு, அவர்களது பதிவின் 'மூப்புத் தன்மை' அடிப்படையில், முறையாக வேலை வாய்ப்புகள் வழங்கப்படுவதில்லை. பணம் இருந்தால் அங்கே வேலையை விலை கொடுத்து வாங்கலாம். எனவே நாங்கள் தொடங்கியுள்ள வேலை இல்லா பட்டதாரிகள் அமைப்பு மூலம்தான் அரசு வேலைகளை வழங்க வேண்டும்" என கதாநாயகன் அருண் தலைமையிலான பட்டதாரி இளைஞர்கள் உறுதியாகப் போராடுகிறார்கள். அதற்கு வெற்றி கிடைத்ததா, இல்லையா என்பதை அழுத்தமான காட்சியமைப்புகள் மூலம் காட்டுகிறார் இயக்குனர். ஆனால் பட்டதாரிகளை உசுப்பிவிட்டு வழி நடத்தும் சீரியஸ் எழுத்தாளர் ரகுவரன், நாயகனின் காதலி பிரியங்கா திரிவேதி ஆகியோரின் பாத்திரத்தில் அழுத்தம், முழுமை இரண்டுமே மிஸ்ஸிங்!

"இனி வேலை கிடைக்காதுன்னு தெரிஞ்சுதான், கணவன்ங்கிற வேலையை ஏத்துக்கிட்டேன். இன்னும் கொஞ்ச நாள் காத்திருந்தா, இந்த வேலைக்குக்கூட தகுதியில்லேன்னு என்னை நிராகரிச்சுடுவாங்க" என்று அருணின் உயிர் நண்பன் சார்லியின் வறண்ட கண்களால் அழ முயற்சிக்கும்போது நமக்கும் கண்ணீர் முட்டுகிறது.

அரசு வேலை வாய்ப்புகளில் இட ஒதுக்கீடு என்பது போய், இன்று தனியார் துறையிலும் இட ஒதுக்கீடு என்ற கோரிக்கை வலுப்பெற்றிருப்பதை இயக்குனர் எப்படி மறந்தார் என்பது தெரியவில்லை. எனினும் சுய வேலை தேடிக் கொள்ள, கடன் கேட்டு வங்கியை அணுகும் பட்டதாரிகள், எப்படிப் பந்தாடப்படுகிறார்கள் என்கிற இன்னொரு பக்கத்தைத் தொடாமல் இல்லை. தலையிலும் முகத்திலும் அரை சென்டி மீட்டர் முடியும், முறுக்கேறிய உடம்புமாய் வரும் அருண், கேரக்டராகவே மாறிவிட்டிருக்கிறார். கீப் இட் அப்!

படத்தில் பிரச்னையின் தீவிரத்தைத் தொட்டுவிடுவதென்று இயக்குனர் ஒரு தீவிரவாதி போல செயல்பட்டிருப்பதில், இசை, ஒளிப்பதிவு உள்ளிட்ட தொழில் நுட்பங்கள் இரண்டாம் பட்சமாக அமுங்கி விட்டன என்றாலும், ஜனனத்தில் கந்தக மணம்.

**- விஷுவல்தாசன்**

• அபவ் ஆவரேஜ்

# எதுவரை இருக்கும் வெண்மை
# எதுவரை உஜாலா இருக்குமோ அதுவரை!




தண்ணீரிலுள்ள கடினமான கறை ஏற்படுத்தும் தூள்கள் காரணமாக துணிகளின் வெண்மை பழுப்பாகி விடுகிறது. உஜாலாவிலுள்ள இன்ஸ்டா-வைட்னிங் சிஸ்டம்™ மட்டுமே ஆண்டுக்கணக்கில் வெண்மை தொடர்ந்திருக்கச் செய்யும்.




வெண்மை தொடர்ந்து இருக்கும்,
ஆண்டாண்டுகளாய்

A product of Jyothy Laboratories Ltd.

Situations/JLL/UJALA/41/2004 Tam

# இது, அது, எது?

தமிழ்ப் பேராசிரியை புனிதாவிடம் பத்திரிகையை நீட்டி, "மேடம் நீங்க அவசியம் வரணும்" என்றேன்.

"லவ் மேரேஜா? அரேன்ஜ்டா?" என்று கேட்டவாறே வாங்கிக் கொண்டார்.

பல்வேறு துறை பேராசிரியைகள் சுற்றி உட்கார்ந்திருக்க அவர் 'சடார்' என்று அப்படிக் கேட்கவும், எனக்கு தர்மசங்கடமாகிவிட்டது.

"காலம் மாறிக்கிட்டே இருக்கு. இப்ப லவ்தானே பெஸ்ட் சாய்ஸ் ஆனந்தி?" கணிதப் பேராசிரியை கனகா சிரித்துக் கொண்டே கேட்டார்.

"இல்ல மேடம், 'பெற்றோர் ஏற்பாடு செய்யும் திருமணம் தான்' என்ற அணியில் நான் பேசுகிறேன்" என்றேன்.

"காதல் திருமணமா? பெற்றோர் ஏற்பாடு செய்யும் திருமணமா? எது உயர்ந்தது?' எங்கள் காலேஜ் ஆண்டு விழாவில் நடைபெறப்போகும் பட்டிமன்றத்துக்கு, மாணவியர் தலைவியான நான் பத்திரிகையை ஒவ்வொருவரிடமும் நேரில் கொடுத்து அழைத்துக் கொண்டிருந்தேன்.

**- ரேகா ராகவன்**

## போஸ்ட் கார்ட் கதைகள்

# காதோடு...!

அம்மாவைப் பார்க்க, குழந்தை ஹரிணியுடன் முதியோர் இல்லத்துக்குச் சென்றான் வடிவேல். குழந்தையைக் கொஞ்சும்போதுதான் அவள் அணிந்திருந்த காதணியை கவனித்தாள் அம்மா. அவள் கண்கள் கலங்கின. "ஏம்மா அழற?" என்றான் வடிவேல்.

அவள் பதில் எதுவும் சொல்லவில்லை. எந்தக் காதணியை வீட்டில் காணவில்லை என்று சொல்லி, மருமகள் சியாமளா தனக்குத் திருட்டுப் பட்டம் கட்டி, முதியோர் இல்லத்தில் சேர்த்தாளோ, அந்தக் காதணியைத் தான் குழந்தை அணிந்திருந்தாள்.

**- சுமித்ரா ராஜு**

**எப்போதாவது மஞ்சரி இரவில் திடுக்கிட்டு, ஏசி இருந்தும் வியர்வை வெள்ளத்தில் எழுந்திருக்கும்போது, கனவின் விளிம்பில் அந்த விபத்தை மறுபடி வாழ்வாள். அது வந்த விபத்தா, வரப் போகும் விபத்தா என்பது பற்றிக் குழப்பமாக இருக்கும்.**

இந்த வருஷம் மழையை சற்றும் எதிர்பாராத சென்னை திண்டாடியது. குடைகள் விரிய மறுத்தன. பல்புகள் எரிய மறுத்தன. வாகனங்கள் புறப்பட மறுத்தன. பேருந்துகள் நிற்க மறுத்தன. சாக்கடைகள் பாய மறுத்தன. துணிகள் காய மறுத்தன.

நுங்கம்பாக்கத்தில் ஒரு திங்கட்கிழமை. ஹாடோஸ் ரோடை ஒட்டிய ஒரு சாலையில், அந்த நவீனமான கட்டடத்தின் உச்சி மாடியில் இருந்தது இன்சாஃப் நிறுவனத்தின் போர்டு ரூம். சுற்றிலும் நீலக் கண்ணாடிகள் சென்னையின் மழையோசைகளை மழுப்ப, நீண்ட முட்டை வடிவமேசையைச் சுற்றி பல இருக்கைகளில் பல வகைச் செருக்குகளுடன் விருப்பு வெறுப்புகளுடன் உட்கார்ந்திருந்தவர் அனைவரும், பெரும்பாலும் ஐம்பது வயதுக்கு மேற்பட்ட போர்டு மெம்பர்கள். பென்ஸ் டோயோட்டா, டயபடிஸ் பைபாஸ் பெரிய மனிதர்கள். சன்னலுக்கு வெளியே நகரத்தின் தவிப்பை அறியாத, கவலைப்படாத வேறு உலகம்.

"நீங்க போகலைன்னா சரிப்பட்டு வராது இந்தர்."

இந்தர் என்றது சேர்மன் ராகவேந்தரை.

"ஸிஎஃப்ஓவை முதல்ல அனுப்பிச்சுப் பார்ப்போமே...? அப்புறம் போய் சேர்ந்துக்கறேனே."

"ராகு, உனக்கு ஏதாவது ப்ராப்ளமா?" என்றார் ரமேஷ் சந்த்ரா. அடுத்த சேர்மனாக ஆசைப்படும் பெங்காலி.

"இல்லை."

"ப்ராப்ளமா இருந்தாலும் இப்ப வெளிய சொல்லாதே... ஸ்டாக் விழுந்துரும்."

"ஐ ஹேவ் நோ ஹெல்த் ப்ராப்ளம் ரமேஷ்."

மற்ற போர்டு மெம்பர்கள் அதை தலையசைத்து ஆமோதித்தனர்.

"மீடியாவுக்கு எந்தவித சந்தேகமும் வரக்கூடாது."

"ஜிடி ஆர்ல எத்தனை தேறும்?"

"ஃபைவ் ஹண்ட்ரட் மில்லியன்

# உள்ளம் துறந்தவன்

உனக்கு யாரைப் பிடிச்சிருக்கோ அவனைக் காட்டு, கல்யாணம் பண்ணி வச்சுரலாம்

பிடிச்ச மாதிரி யாரும் வரலையே!



• படம் : ஸ்ரீஹரி




யுரோ."

"லண்டன் ஸ்டாக் எக்ஸ்சேஞ்சில தானே?"

"ஆமா."

அப்போது கதவு திறந்து அந்த இளம் பெண் திடீர் என்று நுழைந்தாள். அத்தனை பேரை அங்கே அவள் எதிர்பார்க்கவில்லை போலும்... சட்டென்று சுட்டு விரலைக் கடித்துக் கொண்டாள்.

"ஸாரி... ஸாரி... ஸாரி' என்று கையை உதறிக் கொண்டு திரும்பியவளை "என்ன மஞ்சு?" என்று கேட்டார் ராகவேந்தர்.

"அப்புறம் பார்க்கறேன் அண்யா... பிசியா இருக்கிங்க..."

"அதெல்லாம் இல்லை வா.. வாம்மா வா. மஞ்சுவுக்கு நான் எப்பவுமே

அவய்லபின்."

"எக்ஸ்க்யூஸ் மி."

"ஜென்டில்மன், நீங்க இவளைச் சந்திச்சதில்லை... என் மகள் மஞ்சரி. திஸ் இஸ் தி போர்ட் ஆஃப் இன்சாஃப்."

மஞ்சரி பயத்துடன் தலையை மையமாக அசைத்து நழுவினாள்.

"இரு."

"வேற ரூம் போயிரலாம் அண்யா."

தனி அறையில் "அண்யா, எனக்கு ரொம்ப கில்ட்டியா இருக்கு... நான் பாட்டுக்குக் கரடி மாதிரி குறுக்க பூந்தடிச்சு உள்ள வந்துட்டேன். இந்த மாளவிகா சனியன் சொல்ல மாட்டாளோ?"

"மாளவிகாகிட்ட மஞ்சரி எப்ப வந்தாலும் அனுமதின்னு உத்தரவு. நீ என் செல்லப் பெண்ணில்லையா... என்னிக்காவது ஒரு நாள் நீ அந்த போர்டில உட்காரத்தானே போறே."

"நீங்க வேற! எனக்கு வைட்போர்டு, ப்ளாக்போர்ட் மட்டும்தான் தெரியும்."

"என்ன விஷயம் சொல்லு" அவர் பற்ற வைத்த சிகரெட்டைப் பிடுங்கி அணைத்தாள்.

"வீட்ல வந்து சொல்றேன்."

**ம**ஞ்சரி ராகவேந்தரின் வளர்ப்பு மகள். ராகவேந்தர் கோவை, சென்னை, பெங்களூர், கலிஃபோர்னியாவின் ஸான் ஹோஸே நகரங்களிலுள்ள இன்சாஃப் என்னும் புகழ் பெற்ற ஐடி மென்பொருள் நிறுவனத்துக்குச் சொந்தக்காரர். இந்தியாவின் மூன்றாவது பணக்காரர். (சில வேளை இரண்டாவது). இன்சாஃப் என்பதற்கு இந்தியில் நீதி, நியாயம் என்று அர்த்தம் இருப்பது தற்செயலே. ராகவேந்தருக்கு அந்த அளவுக்கு இந்தி தெரியாது. பெற்றோர் கன்னடக்காரர்கள். சென்னையில் ரொம்ப வருஷமாக வாழும் குடும்பம்.

சென்னை நுங்கம்பாக்கத்தில் தலைமை அலுவலகம். இன்சாஃப் நிறுவனத்தின் பங்கு இன்றைக்கு எண்ணாயிரத்து சொச்சத்தில் உலவுகிறது. ஆரம்பத்தில் ஐ.பி.ஓவின்போது பங்குகள் வாங்கினவர்களும், ஸ்டாக் ஆப்ஷன் வைத்திருக்கும் சிப்பந்திகளும் இன்று கோடீஸ்வரர்கள். ராகவேந்தர் இன்று இலேசாக இருமினாலே நாளை சென்செக்ஸ் பத்து பாயிண்ட் விழுந்துவிடும்.

மஞ்சரியை கட்டாயம் ஏதுமின்றி சுதந்திரமாக வளர்த்தார். தன் தொழிலுக்கு சௌகரியமாக எம்.சி.ஏ படித்துவிட்டு, எம்.பி.ஏ படிக்க அமெரிக்காவுக்கு தன் மூத்தமகளிடம் அனுப்ப விரும்பினார் (மாப்பிள்ளை அங்கே ஸர்ஜன்). மஞ்சரி வைஷ்ணவா கல்லூரியில் 'விஸ்காம்' படிக்க வேண்டும் என்பதைச் சொல்லத்தான் இன்று பிற்பகல் அவசரமாக வந்தாள்.

**"வி**ஸ்காம்னா என்ன மஞ்சு?" ராத்திரி ராகவேந்தர் மாத்திரை சாப்பிட்ட பின் கேட்டார்.

"விஷுவல் கம்யுனிக்கேஷனய்யா" ராகவேந்தரை 'அண்யா' என்று கூப்பிடுவாள். சிலவேளை 'பால்டி.' சில சமயம் 'சேடு' 'சோட்டு' இஷ்டத்துக்கு...

"அது படிச்சு என்னவா ஆகலாம்?"

"அய்யோ சேட்டு அப்படி இல்லை... ஏதாவது ஆறதுக்காக இல்லை படிப்பு."

"பின்ன?"

"படிப்பு அறிவு விரிவாறதுக்கு. நான் லிட்டரேச்சர் அல்லது ஜியாலஜி ஏதாவது எடுக்கலாமான்னு கூட யோசிக்கிறேன். இன்னும் தீர்மானிக்கலை"

"அதுகூட சரிதான். அண்டர் க்ராஜுவேட் லெவல்ல ஏதாவது படிச்சாகணுமே... கம்பெனி சமாசாரமெல்லாம் அப்புறம் கத்துக்கலாம்."

"சான்ஸே இல்லை. நான் ஃபாஷன் டிசைன் போறேன்."

"மெடிக்கல் படியேன். என் பலவீனமான இருதயத்துக்கு பாதுகாப்பாக, பாலா சந்தோஷப்படுவார்."

"நோவே. உங்க ஹார்ட்டுக்கு என்ன, பலமாகத்தான் இருக்கு. இல்லை நான் ட்ரெக்கிங் போலாமான்னு யோசிக்கறேன்."

"ட்ரெக்கிங்."

"ஆமாண்யா."

"உனக்கு யாரு இந்த மாதிரி ஸ்க்ருபால் ஐடியாவெல்லாம் சொல்லித் தராங்க...

"பத்துப் பேராவது ஏறினாதான் டிரைவர் வண்டியை எடுப்பார்!"

"ஏன்?"

"வண்டி நின்னுட்டா தள்ள ஆள் வேண்டாமா?"

- விஜயசாரதி

கோயமுத்தூர்க்காரனா?"

இரண்டாவது மாப்பிள்ளை நாக ரத்தினத்தைச் சொல்கிறார்.

"யாராயிருந்தாலும் கூட்டிட்டுவா... பலி போடணும்..."

"ட்ரெக்கிங் போறதும் ஒரு வகையில கல்விதாண்யா."

"அதாவது ஒரு மலை அல்லது குன்று மேல ஏறிட்டா, பரீட்சை பாஸ் பண்ணி டிகிரி வாங்கற மாதிரி, அப்படித்தானே?"

"கேலி பண்ற."

"சேச்சே, ஏதாவது படிக்கறதா தீர் மானிச்சா, எனக்குச் சந்தோஷம். ஜாக்ரஃபின்னே, கேட்டரிங்னே, ஜர்ன லிசம்னே, ஃபேஷன் டிசைன்னே... தினம் மாத்திக்கிட்டே இருக்கே.. ஏதாவது சீக் கிரமா சொல்லு... எனக்கு பெரிய யுரோப்பியன் ட்ரிப் இருக்கு."

"நானும் வரட்டுமா?"

"பிஸினஸ் ட்ரிப் கண்ணு, ஜிடிஆர், இஷ்யு போய்ட்டு வந்தப்பறம் நாமெல் லாம் மெடிட்டரேனியன் ஸ்டார் க்ருய்ஸ் போகலாம்."

"இதையே வருஷா வருஷம் சொல்லிக் கிட்டிருங்க" என்றாள் மரகதவல்லி.

"ஆமண்யா" என்று மஞ்சரி தலை யாட்டினாள்.

"மாப்பிள்ளைகிட்ட போய் ஹார்ட்டை ரிப்பேர் பண்ணிக்கிட்டு, பத்து வயசு குறைச்சுக்கிட்டு வரப் போறேன். இதைப் போய் வெளியில சொல்லி வைக்காதே."

மரகதவல்லி "தெரியாமத்தான் கேக்கறேன், என்ன பண்றது உங்களுக்கு?"

"முன்ன மாதிரி நடக்க முடியலை பல்லு வலிக்குது."

மஞ்சரி சிரித்தாள்.

'சில வேளையில தோள்பட்டைல வலி."

"அண்யா, சும்மா பயங்காட்டாதிங்க. உங்களுக்கு ஒண்ணுமில்லை."

"மஞ்சு, உங்கப்பாவுக்கு இதயமே கெடயாது. அப்ப எப்படி வலி வரும்!"

"அதைத்தான் நான் எப்பவோ இழந்துட்டேனே மதுபாலாகிட்ட."

"மதுபாலா?"

"இளமையில உங்கப்பாவோட, அது என்னங்க?"

"கனவுக்கன்னி! 'ஆர்பார்' படத்தை அம்பது தடவை, மிஸ்டர் அண் மிஸஸ் அம்பத்தஞ்சு தடவை பாத்திருக்கேன்."



மஞ்சரி சட்டென்று நெற்றியைச் சுருக் கிக் கொண்டாள். "உங்களுக்கு நான் இன் ஜினியரிங் படிக்கணும். இன்ஜினியரைக் கல்யாணம் பண்ணிக்கணும், அப்படித் தானே?"

"அதெல்லாம் வேண்டாமே... உனக் காக விஜி காத்துக்கிட்டிருக்கானே. ஒரு ஃபோன் போட்டா ஓடி வந்துருவான்" என்றாள் மரகதம்.

"கல்யாணம் எதுக்கு?"

"நல்ல கேள்வி"

"ஒரு ஆளைப் பாத்தா கல்யாணம் பண்ணிக்கணும்னு தோணணும்... விஜி யைப் பாத்தா எனக்குத் தோணலை."

"நீ அவனை எப்பப் பார்த்தே?"

"போட்டோல பாத்தேன்மா. பிடிக் கலை. பேசறதே புரியலை."

"ரொம்ப சௌகரியம் தெரியுமா?"

"உனக்கு அமிதாப்பச்சனைத்தான் பிடிக்கும், இல்லை, அவன் யாரு... விவேக் ஓபராய்?"

"அதெல்லாம் அப்ப. இப்ப அர்ஜுன் ராம்பால்."

தந்தையின் முகத்தில் கவலை படி வதை உணர்ந்தாள். "கோவமா?" என்று முகத்தைத் திருப்பினாள்.

"சேச்சே, சான்ஸே இல்லை, உன்னை எப்படி கோவிச்சுக்க முடியும்? உனக்கு யாரை பிடிச்சிருக்கோ அவனைக் காட்டு, கல்யாணம் பண்ணி வச்சுரலாம்."

"பிடிச்ச மாதிரி யாரும் வரலையே. எல்லாருக்கும் எப்படியோ நான் உங்க மகங் கறது தெரிஞ்சுருது. உடனே வழியறாங்க."

"வழியாத ஆள் யாராவது மாட் டுவான்."

**அவன் பெயர் அழகேசன். ஜெமினி ஃப்ளை ஓவரை ஒட்டிய 'அரோமா' என்னும் காஃபி ஷாப்பில் வெயிட்டர்.**

(தொடரும்)



• 'அடைக்கலம்'

'பத்து ரூபாய் போட்டு நூறு ரூபாயை எடுக்கத் துடிக்கும் தமிழ் சினிமாவில், இப்போது ஒன்றல்ல, இரண்டல்ல, மூன்று நல்ல முயற்சிகள்.

# கொள்கைபாக்கம்!

**வருடல் 1:**

படத்துக்குப் படம் புதுக்கதாநாயகிகளை அறிமுகப்படுத்திக் கொண்டிருக்கும் பிரசாந்த், கதாநாயகி இல்லாமல், தமது ஹீரோயிஸத்தை ஒட்டுமொத்தமாக மூட்டை கட்டி வைத்துவிட்டு, கதைக்காக நடித்துக் கொண்டிருக்கிறார். அந்தப்படம் 'அடைக்கலம்.' படைப்பாளி யார்? புவனராஜா! கே.எஸ். அதியமானின் உதவியாளர்.

"ஒரு தாய்ப்பறவை கூட்டுக்காய்... குஞ்சுக்காய் அலைகிறது. எனக்கு அந்த கூடும் குஞ்சுகளும் தெரியும். ஆனால் பாஷை மட்டும் புரியவில்லை - என்ற கவிதைதான் கதை. எப்போதோ ஒரு காரணத்தால் மனைவி, குழந்தைகளைப் பிரிந்து போய் விடுகிற அப்பா, மனைவியின் சாவுக்காக அந்த வீட்டுக்கு இருபது வருடங்களுக்குப் பிறகு வருகிறார். 'இத்தனை நாள் இல்லாமல் எதற்காக இந்த ஆள் இங்கே வந்தார்?" என்று பிள்ளைகள் எதிர்க்கிறார்கள். காரியம் எல்லாம் முடிந்ததும் "இந்தப் பதினாறு நாளும் என் பிள்ளைகள் சுவாசிச்ச, அதே மூச்சுக் காத்தை நானும் சுவாசிச்சிருக்கேன். எனக்கு அது போதும்" என்று கிளம்பிப் போய்விடுகிறார். அவர், குடும்பத்தை ஏன் பிரிந்தார் என்பதை, யதார்த்தமாக, அதேநேரம் அழுத்தமாகச் சொல்கிறேன்'' என்று சொல்லும்போதே இயக்குனரின் கண்களில் கண்ணீர் ததும்பி கோடாக இறங்கியது. அந்த அப்பா கேரக்டரில்... பிரசாந்தின் தந்தை தியாகராஜன்! சரி, படத்தின் தயாரிப்பாளர்? 'வீடு' படத்தை எடுத்த நாராயணதேவ் - கலாவதி தம்பதி.



• 'உள்ளக் கடத்தல்'

**வருடல் 2:**

'குடைக்குள் மழை'யில் கையையும்

பணப் பையையும் சுட்டுக் கொண்ட பிறகு - 'அட!', 'ரவுடி' ஆகிய இரண்டு கமர்ஷியல் படங்களில் நடிக்க வந்து விட்டார் பார்த்திபன்.

'எண்டே வீடும் அப்பூண்டே' (என் வீடு அப்பாவினுடையது) என்ற மாநில விருது பெற்ற மலையாளப் படத்தின் தமிழ் ரீமேக்தான் 'கண்ணாடிப் பூக்கள்'. இந்தப் படத்தில் நடித்த அஸ்வின், சிறந்த குழந்தை நட்சத்திரத்துக்கான தேசிய விருதைப் பெற்றிருக்கிறார். இவர் நடிகர் ஜெயராமின் வாரிசு. பாசமாய்ப் பொத்திப் பொத்தி வளர்க்கிற பிள்ளை தொலைந்து போய் விட்டால், ஓர் அன்பு இல்லம் என்ன ஆகும் என்பதுதான் கதை. நல்ல படம் எடுக்க வேண்டும் என்ற லட்சியத் தோடு படத்தைத் தயாரித்து வருகிறார்கள் அமெரிக்கவாழ் இந்திய மென்பொருள் உற்பத்தி யாளர்களான ஜோஸ் பிரதர்ஸ்.

**வருடல் 3:**

சிகிச்சை பெற தமிழகத்துக்கு வந்து, காதலோடு திரும்பிப் போகும் ஈழப் பெண் போராளி, அவளது மனப்போராட்டங்கள் என 'காற்றுக் கென்ன வேலி' படத்தில் யதார்த்தமாய்ச் சித்திரித்து, தமிழக தணிக்கைக் குழுவுடன் மல்லுக்கட்டிய புகழேந்தி தங்கராஜை நினைவிருக்கிறதா? ஆரவாரமோ ஆர்ப்பாட்டமோ இல்லாமல் அவர் எடுத்து முடித்திருக்கும் புதிய முயற்சி 'உள்ளக் கடத்தல்'.

"இந்த முறை சர்ச்சைகளுக்குள் புகாமல் மனித உள்ளங்களுக்குள் பயணம் செய்திருக்கிறேன்" என்கிறார். 'படத்தின் நாயகி குட்டி ராதிகாவுக்கு நடிப்புக்காக ஒரு விருது நிச்சயம்' என்கிறது படக்குழு. வெல்க, கொ(ள்ளை)டாம் பாக்கம்!

- ஸ்ரீ



● 'கண்ணாடிப் பூக்கள்'

**'ரொம்ப போரடிக்குது, என்ன செய்யறதுன்னு தெரியலே' என்று குறைப்பட்டுக் கொள்பவர்களுக்காக, ஆபிஸில் இருந்தபடியே விளையாடக்கூடிய சில சுலப விளையாட்டுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.**

### டாக்குமெண்டரி த்ரோ

**தேவையான பொருள்கள் :** அதி முக்கிய டாக்குமெண்ட்ஸ் இரண்டு கிலோ, ஒரு குப்பைத் தொட்டி.



# விளையாட்டப்

**செய்முறை :** "இதை பத்திரமா ஃபைல் பண்ணுங்க'' என்று உங்கள் பாஸ் உங்களிடம் கொடுக்கும் டாக்குமெண்ட்ஸை, அவர் தலை மறைந்ததும் கன்னாபின்னாவென்று கசக்கி வைத்துக் கொள்ள வேண்டும். பின்பு குப்பைத் தொட்டியை உங்கள் சீட்டிலிருந்து நான்கரை அடி தள்ளி வைக்கவும். ஒவ்வொரு டாக்குமெண்டாக உட்கார்ந்திருந்தபடியே, குப்பைத் தொட்டிக்குள் மூன்று தடவைக்குள் சீட்டை விட்டு எழுந்திருக்காமல், எம்பி எம்பிப் போட வேண்டும். முதலில் சரியாக வராது. தொடர்ந்து முயற்சி செய்தால் பலன் கிட்டும்.

அடுத்த லெவல் போக விருப்பமுடையவர்கள், குப்பைத் தொட்டியை 16 அடி, 34 அடி, 64 அடி என்று நகர்த்திக் கொண்டே போகலாம். இதுவும் போராடித்தால், பின்புறமாக திரும்பி நின்று கொண்டு, கண்களை மூடியபடி குறிபார்க்க பழகிக் கொள்ளலாம்.

### முனைவர் விளையாட்டு

**தேவையான பொருள்கள் :** அன்றைய செய்தித் தாள், ஒரு கால்குலேட்டர், ஒரு ஸ்கெட்ச் பென்.

**செய்முறை :** செய்தித்தாளைப் பிரித்து வைத்து கொள்ளவும். பின்பு கவனமாக ஒவ்வொரு பக்கத்திலும் எத்தனை மெய்யெழுத்துகள் ஒளிந்திருக்கின்றன என்று எண்ணி, தனியாக குறித்துக் கொள்ளுங்கள். பிறகு எத்தனை உயிர் எழுத்துகள் இருக்கின்றன என்று குறித்துக் கொள்ளுங்கள். பின்பு உயிர் மெய். மொத்தமாக பக்க வாரியாக டோட்டல் போட்டுக் கொள்ளவும். துல்லியம் மிக முக்கியம்.

இதே போல் தொடர்ந்து ஒரு வாரம் விடாமல் செய்யவும். ஒவ்வொரு திங்களன்றும், சென்ற வாரம் எந்தெந்த நாட்களில் எந்தெந்தச் செய்திகளுக்கு அதிக மெய்யெழுத்துகள் பயன்படுத்தப்பட்டன, எந்தெந்தச் செய்திகளுக்கு உயிர் எழுத்துகள் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டன என்று 'ஆடிட்டிங்' செய்யவும். உங்கள் கண்டுபிடிப்புகளைக் கொண்டு ஒரு ஆய்வுக் கட்





டுரை எழுதி, பல்கலைக் கழகங்களுக்கு ஆபீஸ் செலவில் அனுப்பவும். ஒரு வேளை முனைவர் பட்டம் கிடைத்தாலும் கிடைக்கும்.

## நிமிரும் பெண்டு

**தேவையான பொருள்கள் :** ஸ்டேப்லர் பின் ஆறு டஸன், உடன் வேலை செய்யும் ஒரு நபர்.

# போச்சு!

**செய்முறை :** பட்டை பட்டையாக இருக்கும் ஸ்டேப்லர் பின்னை எடுத்துக் கொண்டு, இரண்டு நாற்காலிகளில் நீங்களும் உங்கள் நண்பரும் எதிர் எதிராக அமர்ந்து கொள்ளவும். பின்னர் ஒவ் வொரு பின்னாக அந்தப் பட்டையிலிருந்து பிரித்து, ஸ்டேப்லரைக் கொண்டு லாகவமாக தட்டித் தட்டி 'பெண்டு' எடுத்து நேராக்க வேண்டும். இடையிடையே வரும் டெலிஃபோன் கால், கஸ்டமர்ஸ், உங்கள் பாஸ் போன்ற தொந்திரவுகளால் கவனத்தைச் சிதற விடக் கூடாது. ஆபீஸ் மூடுவதற்குள் யார் அதிகமாக பின்னை உடைக்காமல் பெண்டு எடுக்கிறார்களோ, அவரே வெற்றி பெற்றவராக அறிவிக்கப் படுவர். தேவைப்பட்டால் ஒரு அம்பயர் வைத்துக் கொள்ளவும்.

வீட்டுக்குச் சென்றவுடன் அலுப்புடன் "அப்பப்பா, இன்னிக்கு ஆபீஸ்லே ஒரே பெண்டு நிமித்துற வேலை" என்று தாராளமாக சலித்துக் கொள்ளலாம்.

## ட்வின் டவர்ஸ்

**தேவையான பொருள்கள் :** ஒரு குயர் கோடு போடாத பேப்பர், ஒரு பஞ்சிங் மெஷின், ஒரு அப்பிராணி மனிதர்.

**செய்முறை :** ஒவ்வொரு பேப்பராக பஞ்சிங் மெஷினின் வாயில் செருகி, பொட்டு பொட்டாக ஓட்டை போட்டுக் கொள்ளவும். ஒன்றாகக் கலந்து நன்றாகக் குலுக்கி உடன் வேலை செய்பவரிடம் கொடுத்து, ஒன்றன் மீது ஒன்றாக எண் வாரியாக இரண்டு வரிசைகளில் அடுக்கச் சொல்லவும். முழுமையாக அடுக்கி முடித்ததும், 938, 1023, 2079 போன்ற நம்பர் போட்ட பொட்டை மட்டும், தனியாக, கண்களை மூடிக் கொண்டு கோபுரத்தைக் கலைக்காமல் எடுக்கச் சொல்லலாம். மனிதனின் ஏழாவது அறிவுக்குத் தீனி



போடும் விளையாட்டு இது. நேரம் போவதே தெரியாது.

இதே ரேஞ்சில் கொஞ்சம் கொஞ்சமாக கிரிக்கெட், கபடி, 100 மீட்டர் ஓட்டப்பந்தயம், பாக்ஸிங், நீச்சல் போன்ற விளையாட்டுகளையும், அதிக சத்தம் எழுப்பாமல், யாரையும் தொந்திரவு செய்யாமல் ஆபீஸில் விளையாடிப் பார்க்கலாம்.

**- மருதன்**



# "அடுத்த தலைவர் தளபதிதான்!"

## – சரத் பரபரப்பு பேட்டி

**'ஏய்' படத்தின் எதிர்பாராத வெற்றி, 'அய்யா' படத்தின் கடைசிக் கட்ட படப்பிடிப்பு, நடிகர் சங்கத் தேர்தல் என பரபரப்பாக இருந்த சரத், நமக்களித்த விறுவிறுப்பான பேட்டி...**

**இப்போதெல்லாம் ஒரே மாதிரியான கதையம்சம் கொண்ட படங்களில் அதிகம் நடிக்கிறீர்களே?**

'சத்ரபதி', 'ஏய்' ஆகிய இரு படங்கள் ஒரே நேரத்தில் வெளியாகிவிட்டதால் இப்படித் தோன்றுகிறது. இரண்டு கதைகளின் ஃப்ளாஷ்பேக்குகளிலும் ஹீரோவை இராணுவ அதிகாரியாகக் காட்டுகிறோம். ஆனால் சூழ்நிலைகளும் காட்சியமைப்புகளும் வெவ்வேறு. சத்ரபதி பரம்வீர் சக்ரா விருது பெற்ற மேஜர். தமது நிலத்துக்காக ஒரு ஜாதிக் கட்சித் தலைவருடன் போராடுகிறார். 'ஏய்' படத்தின் ஹீரோ, தவறு செய்யும் போலீஸ் அதிகாரிகளைக் கொல்லாமல் புத்தி புகட்டுகிறார். 'கம்பீரம்' படத்தில் காவல் அதிகாரியாக நடித்தேன். இப்போது 'காக்கி'யில் நடிக்கிறேன். ஆனால் கதை வேறு. அதற்காகத் தொடர்ந்து இதே மாதிரிப் பாத்திரங்களில் நடிக்க முடியாது.

**'நட்புக்காக', 'சூர்யவம்சம்' போல பெயர் வாங்கித் தந்த குணசித்திரங்களை முற்றிலுமாகத் தலை முழுகி விட்டீர்களா?**

நிச்சயமாக இல்லை. சரத்குமாரால் இதுவும் முடியும் என்று ரசிகர்களே சொல்கிற மாதிரி, 2006ல் புதிய பாதையில் பயணம் தொடங்கப் போகிறேன். பிதாமகனில் விக்ரம், பேரழகனில் சூர்யா செய்ததுபோல, சமுதாயத்தில் வாழும் நிஜமான, அதே நேரம் விநோதமான கேரக்டர்களை செய்யப்போகிறேன். இதற்கு எனது ஹீரோ இமேஜ் தடையாக வந்தால், அதைப் பற்றி கவலைப்படப் போவதில்லை.

**இப்படிச் சொல்கிற நீங்கள் புதிதாக 'பன்ச்' வசனங்கள் பேச ஆரம்பித்திருக்கிறீர்கள்... ஏன் இந்த திடீர் முடிவு?**

அனுபவசாலிகள் பக்குவமாக பழமொழி சொல்லும்போது நாம் ரசிப்பதில்லையா? அப்படித்தான் ஹீரோ 'பன்ச்' வசனங்கள் பேசினால் ரசிகர்கள் அதை விரும்பி ரசிக்கிறார்கள். பன்ச் வசனங்களை மக்கள் கருத்தோடு ஒன்றி வரும்படி நியாயமாகச் சொன்னால் தவறில்லை. அதையே, நான் வானத்திலிருந்து குதித்து வந்தவன். எனக்குக் கொம்புகள் உண்டு. நான் விரலசைத்தால் பூமி நிற்கும் என்பது போல அதீதமாகப் பேசினால் அது பிதற்றல்.

**திருட்டு வி.சி.டி.யை ஒழிக்கக் கடுமையான சட்டம் வந்தும் தீபாவளிக்கு வெளியான படங்கள் சரியாக ஓடவில்லையே... உண்மையில் திருட்டு வி.சி.டி. ஒழிக்கப்பட்டுவிட்டதா இல்லையா?**

நாட்டிலிருந்து சின்னம்மையை முற்றாக ஒழித்துக் கட்டிவிட்டோம் என்பது போல, இதில் அடித்துச் சொல்ல முடியாது. குண்டர் சட்டத்துக்கு பயந்து இப்போது ஐம்பது சதவிகிதம் திருடர்கள் அடக்கி வாசிக்கிறார்கள். சட்டத்தை கடுமையாகச் செயல்படுத்தினால் இன்னும் பயம் ஏற்படும். திருட்டு வி.சி.டி. விஷயத்தில் மக்கள் அதைத் திருட்டுப் பொருள் என்றே நினைக்கவில்லை. திருட்டு வி.சி.டி.யால் திரையுலகமும், அதை நம்பி வாழும் பல்லாயிரம் தொழிலாளர்களின் வாழ்க்கையும் எந்த அளவு பாதிக்கப்படும்

என்பதை குறும்படங்கள் வாயிலாகக் காட்டி, முதலில் அவர்களுக்கு விழிப் புணர்வுக் கல்வி தர வேண்டும்.

**தடுக்கி விழுந்தால் விழா கொண் டாடுவது திரையுலகின் வாடிக்கை. அதிலேயே இருந்துகொண்டு திருட்டு வி.சி.டி. ஒழிப்புக்கு நடவடிக்கை எடுத்த அரசைப் பாராட்டும் திரையுலக விழாவுக்கு, ஆட்சேபம் தெரிவித்தது நியாயமா?**

திருட்டு வி.சி.டிக்கு எதி ராக குண்டர் தடுப்புச் சட்டம் கொண்டு வந் ததை நான் பாராட்டி யிருக்கிறேன். ஆனால் வெளிப் புறப் படப்பிடிப் புக் கட்டணத்தை பல மடங்கு உயர்த் தியதால், படப் பிடிப்பு என்றால் பாண்டிச்சேரிக்குப் போக வேண்டிய கட்டாயம். இதனால் திரையுலகம் பக்கவாத நிலையில் முடமாகிப் படுத்து மூன்றாண்டுகள் ஆன பிறகு, கட்டணங்களைக் குறைத்து இன்று நடவடிக்கையை எடுத்த அரசு, அன்றே இதைச் செய்திருக்கலாமே என்றுதான் கேட்டேன். சினிமா மொத்தமாக நலிந்து போய், பலமுறை முதல்வரைச் சந்தித்து முறையிட முயன்றும் முடியாமல் போனது எல்லோருக்கும் தெரியும். இப் போது திடீரென்று கூப்பிட்டு எல் லாம் செய்கிறேன் என்று சொன்னால் இதில் அர சியல் உள்நோக்கம் இருக் கிறதா இல்லையா? இதைத்தான் நான் சொன்னேன். அதே நேரம் விழாவுக்குச் சென்றவர்களை நான் தடுக்கவில்லை.

**தமிழை செம் மொழியாக அறிவிக்கச்**



**செய்ததில் தி.மு.க. கூட்டணிக்குப் பங்கிருப்பதால் கலைஞருக்குப் பல தரப்பிலும் பாராட்டு விழா எடுக்கப்பட்டது. அப்போது இவர் ஆட்சேபிக்கவில்லையே என்று எதிரணியில் குரல் கேட்கிறதே?**

திருட்டு வி.சி.டி. ஒழிப்பும், செம்மொழி அறிவிப்பும் ஒன்றா? இந்த ஒப்பீடே தவறு. அன்றைய பரிதிமாற் கலைஞரில் தொடங்கி இன்றைய கலைஞர்வரை போராடியதால், கடைக்கோடித் தமிழர்களின் கோரிக்கை நிறைவேற இத்தனை ஆண்டுகள் ஆகியிருக்கின்றன. அதுவும் நமக்குச் சாதகமான கூட்டணி அமைந்ததால் இது நடந்திருக்கிறது. திருட்டு வி.சி.டி. நேற்று முளைத்த களைச் செடி. தமிழ் இரண்டாயிரம் வருட ஆல விருட்சம்.

**நடிகர் சங்க நிர்வாகிகள் அரசியல் சார்புடையவர்களாக இருப்பதால், சங்கத்தை நிர்வகிப்பதில் குழப்பமும், சர்ச்சைகளும் நீடிப்பதைப் பற்றி யோசித்திருக்கிறீர்களா?**

பல முறை யோசித்திருக்கிறேன். நான், எஸ்.எஸ். சந்திரன், நெப்போலியன், ராதாரவி போன்றவர்கள் எல்லாம் அரசியலில் இருக்கிறோமே தவிர, இதுவரை நடிகர் சங்கத்துக்குள் அரசியலைக் கொண்டு வந்தது கிடையாது. சில சமயம் நாம் சொல்லும் கருத்துகளை, நமது அரசியல் பின்னணியோடு தொடர்படுத்தி மீடியாக்கள் எழுதி விடுகின்றன. இது நடிகர் சங்க நிர்வாகத்தை எந்த விதத்திலும் பாதிப்பதில்லை. ஆனால் எனது தனிப்பட்ட கருத்து என்னவென்றால், இரண்டு வருடங்களுக்குமேல் ஒரு தலைவரோ, செயலாளரோ, பொருளாளரோ அந்தந்தப் பதவிகளில் இருக்கக் கூடாது. நடிகர் சங்க நலனுக்காகக் கஷ்டப்பட்டவர்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள். எனவே நிரந்தர உயர் மட்டக் குழு ஒன்றை ஏற்படுத்தி, ஏற்கெனவே சங்கத்தில் உயர் பதவி வகித்தவர்களை அதில் இடம் பெறச் செய்ய வேண்டும். இவர்கள் தங்கள் அனுபவத்தைக் கொண்டு புதிதாக தேர்ந்தெடுக்கப்பட்டு வரும் நிர்வாகிகளுக்கு வழிகாட்ட வேண்டும். இரண்டு வருட இடைவெளிக்குப் பிறகு மீண்டும் தேர்தலில் போட்டியிடலாம். இதன்மூலம் புதியவர்களுக்கு வாய்ப்புக் கிடைக்கும். நிர்வாகத்தை தழைத்தோங்கச் செய்வதில் போட்டி மனப்பான்மை ஏற்படும். இந்த சுழற்சி முறைதான் இப்போதைய தேவை.

**ஜனநாயக மக்கள் அரசியலில் இருக்கும் உங்களைப் போன்றவர் செயலாளராக இருக்கும் நடிகர் சங்கத்தில், குரல் வாக்கு மூலம் பதவிகளை நீட்டித்துக் கொண்டது சரியா?**

இப்படியொரு குற்றச்சாட்டை வெளியிலிருந்து ஒரு சிலர் சொல்வதனால் அது ஜனநாயக மீறல் ஆகிவிடாது. இருப்பினும், மேலும் அதற்கு இடம் தராமல் ஜனவரி முப்பதில் தேர்தல் என்று அறிவித்து, சர்ச்சைக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டோம்.

**இன்று உங்கள் தலைவர் கருணாநிதி அரசியலில் இருந்து ஓய்வு பெற விரும்புகிறேன் என்று சொல்லி வருகிறார். அவருக்குப் பிறகு தி.மு.க.வில் யாரைத் தலைவராகப் பார்க்கிறீர்கள்?**

கட்டுப்பாடும், கண்ணியமும் வழுவாமல் சமூகக் கடமையாற்றும் ஜனநாயகப் பேரியக்கம் தி.மு.க. அடுத்த தலைவர் யார் என்று பேச வேண்டிய அவசியம் இப்போது எழவில்லை. நூறு வயதிலும்கூட ஊர் மெச்சும் தலைவராக கலைஞரால் கடமையாற்ற முடியும். அவருக்கு அடுத்த நிலையில் தளபதி ஸ்டாலின்மீது தொண்டர்கள் வைத்திருக்கும் அன்பும், பிணைப்பும் ஆழமானது. அடுத்த தலைவருக்கான தகுதிகள் எங்கள் தளபதிக்கு உண்டு.

* 'அய்யா' படத்தில் நயன்தாராவுடன்...



'அய்யா' படத்தில்

**காமராஜரைப் போன்ற பாத்திரத்தில் நடிக்கிறீர்களா?**

ஐந்தாவது முறையாக சுயேச்சை சட்டமன்ற உறுப்பினராக தொடர்ந்து தேர்தெடுக்கப்படும் ஒரு முதியவரது பாத்திரம்தான் அய்யா. அவரது தொகுதியில் உள்ள ஒவ்வொரு ஊரும் ஒவ்வொரு முகமும் அவருக்குப் பரிச்சயம். எல்லோரும் படிக்க வேண்டும், ஏழை எளிய மக்களின் வாழ்க்கைத் தரம் உயர வேண்டும் என்று, அதற்காக உழைக்கிற ஒரு ரோல் மாடல் தான் அய்யா. காமராஜரும் ஒரு முன் மாதிரி என்பதால் இப்படிப் பேச்சு கிளம்பியிருக்கிறது. படம் பார்க்கிற ரசிகர்களை எந்தத் தலைவர் பாதித்திருக்கிறாரோ, அந்தத் தலைவராக அய்யா கேரக்டர் தெரிவார். அத்தனை வலிமையாக அதை உருவாக்கியிருக்கிறார் இயக்குனர்.

**நீண்ட இடைவெளிக்குப் பிறகு தந்தையாகி இருக்கிறீர்கள். இப்போது உங்கள் மனநிலை எப்படியிருக்கிறது?**

எனக்கு மூன்று பெண் பிள்ளைகள். இவன் முதல் ஆண்பிள்ளை. எல்லாக் குழந்தைகளையும் ஒன்றாகத்தான் பார்க்கிறேன். நான் மறந்துபோன நர்சரி ரைம்களை இப்போது கற்று வருகிறேன். நான் புத்தகத்தை எடுத்து வைத்து காலையில் படித்துக் கொண்டிருந்தபோது, என் மனைவி கேட்டாள், "எனக்குத் தெரியாமல் என்ன படிக்கிறீங்க?" என்று. "அவனுக்கு ஒரு வயதாகும்போது சொல்லித் தர வேண்டுமே" என்றேன். அவனுக்கு நீச்சல் கற்றுத் தர இப்போதே லைஃப் ஜாக்கெட் வாங்கி வைத்துவிட்டேன். நமது குழந்தைகள் நன்றாக வளர வேண்டுமானால், நாம் எல்லா விதத்திலும் சிறப்பாக வாழ வேண்டும். மூன்று பெண்களுக்குத் திருமணம் முடிக்க வேண்டும். இவனை கல்லூரிக்குத் தயார்படுத்த வேண்டும். பொறுப்புகள் அதிகமாகி விட்ட அதே நேரம் நானும் குழந்தையாக மாறிக் கொண்டிருக்கிறேன். இது மிகவும் பிடித்திருக்கிறது.

- ஜெய்

படங்கள் : ஸ்ரீஹரி

**முழுமையான பேட்டியை www.kalkionline.comல் படியுங்கள்**

# மனம் ஏமாற்றும்!

தென்கச்சி சுவாமிநாதன்



ஒருத்தர் தம்முடைய வீட்டை விற்க விரும்பினார். இதைவிட வசதியான ஒரு வீட்டை வாங்கிக் கொள்ளலாம் என்று நினைத்தவர், தரகர் மூலம் பத்திரிகையில் வீடு விற்பனை பற்றி ஒரு விளம்பரம் கொடுத்தார். மறுநாள் விளம்பரம் வந்தது.

விற்கச் சொன்னவர் அந்த விளம்பரத்தைப் பார்த்தார்.

"நம்ம வீட்டுலே இவ்வளவு வசதி இருக்கா... இப்பத்தான் தெரியுது!"

உடனே வீட்டுத்தரகரிடம் ஓடினார்.

"அதை விற்க வேண்டாம்... நானே வைத்துக் கொள்கிறேன்" என்று சொல்லி விட்டு வந்துவிட்டார்.

இன்றைக்கு நம்மில் பலரும் இதே மனநிலையில் தான் இருந்து கொண்டிருக்கிறோம். நமது பலம் என்ன என்பது நமக்குத் தெரியவில்லை. பலவீனங்களையே நமது மனம் அதிகமாகப் படம் பிடித்துக்காட்டுகிறது.

அதன் காரணமாகவே வாழ்க்கையில் சோர்ந்து போய் விடுகிறோம்.

அறிவின் வெளிச்சத்தில் நடைபோடுகிறபோது இப்படிப்பட்ட சிக்கல்கள் ஏதும் எதிர்ப்படுவதில்லை!

மேல் நாட்டில் ஒரு கணவன் - மனைவி. நன்றாகத்தான் குடும்பம் நடத்தினார்கள். இடையில் ஏதோ கருத்து வேறுபாடு. விவாகரத்து செய்து கொண்டார்கள். வெகு நாள் கழித்து அந்தக் கணவர் ஒரு கல்யாணத் தரகரை நாடிச் சென்றார்.

"ஐயா... எனக்கு ஒரு மனைவி தேவை!"

"உங்கள் மனைவி எப்படிப்பட்டவளாக இருக்க வேண்டும்? ஒவ்வொன்றாகச் சொல்லுங்கள். இந்தக் கம்ப்யூட்டர் பதிவு செய்து கொண்டு... தகுந்த பெண்ணைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்து விடும்!"

"மிக்க மகிழ்ச்சி!"

அவர் தம்முடைய எதிர்பார்ப்புகளைப் பதிவு செய்தார். தமக்குத் தகுந்த ஒரு மனைவியைத் தேர்ந்தெடுக்கச் சொன்னார்.

கம்ப்யூட்டர் தேர்ந்தெடுத்துக் கொடுத்தது...

அவருடைய பழைய மனைவியை!

இது உண்மையில் நடந்தது!

(அடுத்த வாரம் பார்ப்போம்)

# நமீதாவின் 'பய'டேட்டா



**செல்லப் பெயர்:** பிட்டி

**சொந்த ஊர் :** பூகம்ப ஆபத்துகள் நிறைந்த சூரத்திலிருந்து வந்திருக்கும் சூறாவளி நான்.

**தினசரி மிரட்டல்:** பிரேக் ஃபாஸ்ட் தர மறுக்கும் அம்மா இலாபென்.

**தினசரி உருட்டல்:** அதிகாலையில் ஜிம்முக்கு எழுப்பும் கருணையில்லாத அப்பா முகேஷ்.

**அதீத பயம்:** எனது உயரத்தை நினைத்து (ஐந்தடி எட்டு அங்குலம்). சிம்பு, மாதவன், விஜய் போன்ற இளம் ஹீரோக்கள் எனது உயரத்தைப் பார்த்து ஒதுக்கி விடக் கூடாதே! இவர்களுடன் ஹை ஹீல்ஸ் போடாமல் நடிக்கத் தயார்.

**அலர்ஜி:** அழகிப் போட்டிகள். அம்மாவின் பிடிவாதத்தால் மிஸ் சூரத் (1998), மிஸ் இந்தியா (2000) ரன்னர் அப் என்று நான்கு அழகிப் பட்டங்கள்.

**சமீபத்திய நடுக்கம்:** கேரளாவின் சாலக்குடி அருவியில் 'ஏய்' படப்பாடலுக்காக நான் முழுவதும் நனைந்தது. அருவியா அது, ஐஸ் கத்தி!

**ஆபத்தான விளையாட்டு:** சிம்ரன் இடத்தை யார் பிடிப்பது என்ற கடும் போட்டியில் ஜெயித்தே ஆகணும்.

- **ஸ்ரீசக்கரம்**



# எங்கே அந்த 3 லட்சம்?

**நீ**ச்சல் போட்டியின் ஒரு பிரிவான 50 மீ, 100 மீ ப்ரஸ்ட் ஸ்ட்ரோக்கில் முடிசூடா ராணியாகத் திகழ்கிறார் தமிழ்நாட்டைச் சேர்ந்த சபா சையத். தன் வாழ்வில் அடித்த எதிர்நீச்சல்களை நம்மிடம் விளக்குகிறார்.

"சின்ன வயசுல தண்ணின்னா எனக்குப் பயம் தெரியுமா? ஆனா முதன்முதலா ஆறாவது படிக்கும் போது ஐஐடியில ஃபிட்னஸ்க்காக நீச்சல் கத்துக்கிட்டபோது அழுதுகிட்டேதான் தண்ணீரில் இறங்கினேன். ஆனா இன்னைக்குப் பல சாதனைகளை உடைச்ச நேஷனல் சாம்பியன்.

நான் முதன் முதலா கலந்துகிட்ட ஸ்கூல் நேஷனல்ஸ், ஜூனியர் நேஷனல்ஸ் இரண்டிலயும் வெறுங்கையோடுதான் வீடு திரும்பினேன். இந்த அவமானம் என்னை உசுப்பேத்த, 2001- கோவா நேஷனல்ஸிலிருந்து இந்த ஏப்ரல் மாசம் டில்லியில் நடந்த போட்டி வரை, ஒரே தங்கவிருது மழைதான். 50 மீ ப்ரஸ்ட் ட்ரோக்கிலுள்ள தேசியச் சாதனைகள் எல்லாம் இப்போ எனக்கே சொந்தம்.

'விழுவது போல் விழுவேன் எதிரிகள் சுகம் காண' என்கிற பாடல் வரி எனக்குத்தான் பொருந்தும் தெரியுமா? 2003ல் அப்பெண்டிக்ஸ் ஆபரேஷன் பண்ணதிலிருந்து நான் ப்ராக்டிஸ் எதுவும் பண்ணாம, கிட்டத்தட்ட ஒரு வருஷம் நீச்சல் பக்கமே போகாம இருந்தேன். இந்தச் சமயத்துல பெங்களூர் பெண்ணான மிதுலா, கூலா ஜெயிச்சுட்டிருந்தாங்க. விடுவேனா நான்? திடீர்னு நேஷனல் போட்டியில கலந்துகிட்டு இரண்டு தங்கங்கள் தட்டிட்டு வந்துட்டேன். பாவம் மிதுலா, அப்செட் ஆகி என்கிட்டப் பேசவேயில்லை.

எனக்கு சைனஸ் பிராப்ளம், இருந்தாலும், காலையில ஐந்து மணிக்கு ப்ராக்டீஸுக்குப் போயிடுவேன். தண்ணி ஐஸ்கட்டி மாதிரி சில்லுனு இருக்கும். பல்லைக் கடிச்சுகிட்டு தண்ணியில இறங்கிடுவேன். அப்புறம் எதுவுமே தெரியாது.

நான் 'எத்தனையோ போட்டியில ஜெயிச்சாலும், இதுவரை பரிசுப்பணமா ஒத்த ரூபா வாங்கினதில்லை. சர்டிபிகேட்ஸ், மெடல்ஸ் மட்டும்தான் வாங்கியிருக்கேன். நம்ம முதல்வர் வேளச்சேரியில நீச்சல் குளம் கட்டிக் கொடுத்தாலும், ஏனோ இதுவரை என்னை மாதிரியான டேலண்ட்ஸை ஊக்கப்படுத்தறதேயில்லை. டெல்லியிலிருந்து ஆந்திராவுக்கு மாறிய ஒரு பெண், ஹைதராபாத் நேஷனல்ல நீச்சலில் ஜெயிச்சதுக்கு சந்திரபாபு நாயுடு இருபத்தெட்டு லட்சங்கள் கொடுத்தார். நம்ம முதல்வர் கொடுத்த வாக்குறுதிப்படி எனக்கு மூணு லட்சம் ரூபாய் இதுவரை அளிக்கப்படவேயில்லை. இந்த வேதனைகள் இருந்தாலும் நான் நிச்சயம் வேற மாநிலம் மாற மாட்டேன்.

அட்லீஸ்ட் பாதுகாப்புக்காகவாவது எல்லோரும் நீச்சல் கத்துக்கிட்டே ஆகணும். அதோட ஃபிட்னஸுக்கும் நீச்சல் ஒரு சிறந்த பயிற்சி."

- சநகன்

படம்: ராஜன்

உ

# கச்சி மூதூர் அர்ச்சகர்கள் க்ஷேமநல ட்ரஸ்ட்

பதிவு & நிர்வாக அலுவலகம் : 16, இரண்டாவது மெயின் ரோடு,
கோட்டூர்புரம், சென்னை - 600 085.
போன்: 24471936 E.Mail : prb@vsnl.com Website : http://personal.vsnl.com/knaw_trust



## வேண்டுகோள்

- ஸ்ரீ காஞ்சி மகாப் பெரியவாள் 1986ல் இந்த டிரஸ்டை ஸ்தாபிக்க அருள்பாலித்தார்.
- இந்த ஸ்தாபனம் தமிழ்நாட்டில் உள்ள பழைமையான கிராமக் கோவில்களில் பூஜை செய்யும், மாத வருமானம் ரூ.1500/-க்கும் குறைவாக உள்ள, அர்ச்சகர்களுக்கு மாத பண உதவி செய்து வருகிறது.
- மகாப் பெரியவாளின் ஆக்ஞைப்படி இந்த நற்பணிக்கு நன்கொடை அளிக்க வேண்டுகிறோம் - ரூ.4,000/-க்கு மேல் மாத மொத்த வருமானம் பெறுபவர்கள் தங்களது ஒரு மாத மொத்த வருமானத்தை *தங்கள் வாழ்நாளில் அவர்களுடைய சௌகர்யப்படி*, நன்கொடையாக கொடுத்து உதவ வேண்டும். மற்றவர்கள் தங்களால் இயன்றளவு கொடுக்கலாம்.
- நன்கொடைகளை க்ராஸ் செய்த காசோலை / டிமாண்ட் டிராப்டாக ***"KACHCHI MOODOOR ARCHAKAS WELFARE TRUST"*** என்ற பெயரில் சென்னையில் ஏதாவ தொரு வங்கிக் கிளையில் பெறுமாறு நிர்வாக அலுவலகத்திற்கு அனுப்பவும்.
- தற்சமயம் இந்த டிரஸ்ட் 287* தேர்ந்தெடுக்கப்பட்ட அர்ச்சகர்களுக்கு மாத உதவித் தொகையாக ரூ. 425/-ஐ வங்கிகள் மூலமாக வழங்கி வருகிறது. (*பட்டாச்சாரியார்கள்- 65, பூசாரிகள் - 118, சிவாச்சாரியார்கள் - 104) தவிர ஆயுள் குழுக் காப்பீடும் தகுதியின்படி செய்து வருகிறது.
- ஒவ்வொரு வருடமும் அர்ச்சகர்களின் எண்ணிக்கை உயர்வதாலும், முதலீடுகளின் பேரில் வட்டி விகிதம் குறைந்து இருப்பதாலும், மூலதனத்தை அதிகரிக்க வேண்டியது அவசியமாகிறது. ஸ்ரீ காஞ்சி மகாப்பெரியவாளின் அருளாக்ஞையின்படி தங்களுடைய நன்கொடைகளை அனுப்பித் தரவேண்டி கேட்டுக் கொள்கிறோம்.

C.V. Narasimhan

**C.V. Narasimhan, I.P.S., (Retd)**
பொறுப்புக் குழுவின் தலைவர்.



பின் குறிப்பு

நன்கொடைகளுக்கு வருமானவரி சட்டப்பிரிவு 80 G- யின் கீழ் வரிவிலக்குண்டு. வெளிநாட்டு நன்கொடைகளை ஏற்க FCRA-ன் கீழ் (எண்: 075820173) பதிவு செய்யப்பட்டுள்ளது.

# கல்கி

ARIGNAR ANNA CO-OP SILKS
KANCHEEPURAM PURE SILK SAREES

இணைந்து வழங்கும்

# பட்டான போட்டி முடிவு

முதல் பரிசு
(ரூ.5000/- பெறுமானமுள்ள பட்டுப் புடைவை)

## கண்ணகி ஆன கண்ணழகி!

அந்தக் காலத்தில் எங்கள் ஊரில் பொண்ணு மாப்பிள்ளை பார்ப்பது, நகை நட்டு, முகூர்த்தப் பட்டு, வரதட்சிணை என எல்லாத்தையுமே பெரிசுகள்தான் நிர்ணயிக்கும். மாப்பிள்ளையும் பொண்ணும் கிரிக்கெட்ல வர்ற ட்வெல்த் மேன் மாதிரி. பொண்ணைப் பார்க்க நினைப்பதோ, பேச முயற்சிப்பதோ தேச விரோதச் செயல்! அதனால், ஒவ்வொருவருக்கும் சூப்பர் ஸ்டார் படத்துக்கு இருப்பது போன்ற எதிர்பார்ப்பு திருமணத்துக்கும் இருந்தது. எனக்கும் தான்!



எனக்கு பக்கத்துக் கிராமத்தில் பெண் பார்த்து இருந்தார்கள். ,ஐந்தாம் வகுப்பு தான் அந்த ஊர் பெண்களுக்கு ஐ.ஏ.எஸ். படிப்பு. நம்மாளும் அந்த ஐ.ஏ.எஸ்ஸை வெற்றிகரமாக முடித்திருந்தாள். நான் அமெரிக்க சி.ஐ.ஏ. அளவுக்கு ரகசிய விசாரணை நடத்தியும், பொண்ணு கறுப்பா, சிவப்பா, கட்டையா நெட்டையா, எஸ். ஜானகியா, உஷா உதுப்பா என்று சரியான தகவல் ஏதும் கிடைக்கவில்லை. கண்கள் அழகாகயிருக்கும் என்ற விசேஷத் தகவல் மட்டும் கிடைத்தது. மனசெல்லாம் பெண்ணைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்ததால், எங்கள் வீட்டார் எடுத்த முகூர்த்தப் பட்டு, துணைப்பட்டுகளைப் பார்ப்பதில் மனம் லயிக்கவில்லை. மேலோட்டமாகப்



* எ. முஹம்மது ஹுமாயூன்

பார்த்து தலையசைத்து வைத்தேன்.

இரவு பத்து மணிக்குத்தான் பெண்ணிடம் தனியாகப் பேசும் வாய்ப்புக் கிடைத்தது. வெட்கத்தால் பொண்ணு குனிந்த தலைநிமிர வில்லை. அவளை சகஜ நிலைக்குக் கொண்டுவர நினைத்து, "நிஷா! நீ உடுத்தியிருக்கிற சிந்தாமணி கலர் பட்டு நல்லாயிருக்கா? நான்தான் செலக்ட் செய்தேன்" என்றேன். அது வரை அமைதியாக, கண்ணழகியாக இருந்தவள், கண்ணகியாக மாறி விட்டாள். ஆவேசத்துடன் "ஆங்! இது எங்க அப்பா எடுத்துத் தந்ததுலோ! இது சிந்தாமணி கலரா? பச்சைக் கலருலோ!" என ஆதங்கப்பட்டாள். கிரிக்கெட்டில் முதல் பாலே நோ பால் ஆனது போல ஆரம்பமே ஏமாற்றமாகி விட்டது.



எங்கள் வீட்டில் மறுவீட்டிற்காக எடுத்த சிந்தாமணி சேலை தான் அது என்று நினைத்தது முதல் தவறு. அறையின் அலங்கார விளக்கு வெளிச்சத்தில், அவள் உடுத்தியிருந்த பச்சை நிறம், எனக்கு சிந்தாமணி நிறமாகத் தோன்றியது இரண்டாவது தவறு.

சுதாரித்துக் கொண்ட நான், "உன்னை சகஜமாகப் பேச வைக்கத்தான் தமாஷாகச் சொன்னேன். தப்பாக எடுத்துக் கொள்ளாதே!" என்று விடிய விடிய "ஸாரி" சொல்லி அவளைச் சமாதானப்படுத்துவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது.

பட்டு சாரிக்காக ஸாரி சொன்னதை இன்று நினைத்தாலும், ஹிஹிஹி... யாகத்தான் இருக்கிறது.

**- ஏ. முஹம்மது ஹுமாயூன்,**
**நாகர்கோவில்**

## இரண்டாவது பரிசு
## (ரூ. 3000/- பெறுமானமுள்ள பட்டுப் புடவை)

# சேர்த்து வைச்ச சீர்பட்டு!



• கோமா கண்ணன்

பட்டான போட்டியை 'கல்கி'யில் பார்த்த போது 'பட்'டென நினைவுக்கு வந்த பதினைந்து வருடத்துக்கு முந்தைய நிகழ்வு. 'பயம், குழப்பம், சந்தோஷம்' என்ற கலவை உணர்வோடு நான் பூப்பெய்திய நாள். தீராத பகை உணர்வு காரணமாக, தாய் மாமா வீட்டுக்கு அழைப்பு விடுக்காத அப்பா ஒருபுறம்! ஆயிரமே இருந்தாலும் தாய் வீட்டுச் சீரை ஆசையோடு எதிர்நோக்கும் அம்மா ஒருபுறம்! விஷ(ய)த்தைச் சொல்லி அனுப்பி விட்டு, வேடிக்கை பார்க்க தயாரான ஊர்ப் பெரிசுகள் ஒருபுறம்! எப்படிச் சமாளிப்பது? அம்மா பரிதவிக்க, சட்டென ஒரு யோசனை.

அப்பா நடுநிலைப் பள்ளி தலைமை ஆசிரியர். வரப்போகும் சண்டையை மனத்தில் வைத்துக் கொண்டு, தமது இமேஜ் பாதிக்கக் கூடாது என்ற நோக்கில் சக ஆசிரியர்களுக்கு அழைப்பு வைக்கவில்லை அப்பா. அப்பாவுக்குத் தெரியாமல் அனைத்து ஆசிரியர்களையும் அழைத்து வர, அம்மாவை ரகசியமாய் அனுப்பி வைத்தேன். சபை நிறைந்து இருக்க, குழப்பத்தில் அப்பா.

தாய் மாமா உறவுகள், சீர்வரிசை, அரக்குக் கலர் பார்டருடன் மஞ்சள் பட்டுப் புடைவை, எல்லாம் வேனில் வந்து வரிசையாக இறங்கின. பேச, ஏச,



முடியாத நிலையில் அப்பா. ஒருவழியாக சடங்குகள் சுபமாகவே முடிந்தன. உறவுகள் ஒன்றுசேர்ந்து கொண்டோம்.

அதே தாய் மாமா மகனை மணந்து கொண்டு, இரண்டு குழந்தைகளுக்குத் தாயாய் நான் இப்போது. ஆனாலும் இன்னமும் அந்த மஞ்சள் பட்டுச் சேலை பீரோவில் பத்திரமாய் இருக்கிறது. அறுந்து போன பந்தங்களை மீண்டும் சேர்த்து வைத்து, அழகு பார்த்த பட்டை மறக்க முடியுமா?

- **கோமா கண்ணன், தென்காசி.**

## மூன்றாம் பரிசு (ரூ. 2000/- பெறுமானமுள்ள பட்டுப் புடைவை)

# அன்பு பொக்கிஷம்!

"அம்மா... அம்மா... என் உண்டியல் பணம் 37 ரூபாய் இருக்கு. நீ அதிலே தீபாவளிக்குப் பட்டுப் புடைவை கண்டிப்பா வாங்கிக்கோ... அம்மா'' என்றான் என் ஒன்பது வயது மகன்! இது நடந்தது 1964ம் வருடம் தீபாவளிக்கு ஒரு வாரம் முன்!

'தேவைக்குப் பஞ்சமில்லை. படாடோபத்துக்கு இடமில்லை' என்னும் நடுத்தர வருவாயுள்ள, அளவான குடும்பம் என்னுடையது! வருடா வருடம், தீபாவளிக்கு என் தந்தை எனக்குப் பட்டுப் புடைவையும், என் கணவருக்கும் மகனுக்கும் துணிமணிகளும், ஆசையாக வாங்கித் தருவது வழக்கம். அவர் திடீரெனக் காலமான மறு வருடம் தீபாவளிக்கு முன், "உன் அப்பா வருடா வருடம் உனக்குப் பட்டுப் புடைவை வாங்கிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அதனால் இந்த வருடம் நானும் உனக்குப் பட்டுப் புடைவை வாங்கலாமென்றிருக்கிறேன். உன் மனத்தில் ஏக்கம் இருக்குமல்லவா?'' என்றதும், "ஏதோ அவர் ஆசைக்கு வாங்கிக் கொடுத்தார். ஆனா நம்ப 'பட்ஜெட்'டில் பட்டுக்கு இடமில்லை. அதனால் எனக்கு வேண்டாம்'' என்று நான் கூறவும், எங்கள் விவாதத்தைக் கவனித்துக் கொண்டிருந்த என் ஒன்பது வயது மகன், 'அப்பாவிடம் பணம் இல்லை போலும்' என்று நினைத்து செய்ததைதான், முதல் பாராவில் எழுதியிருக்கிறேன்!



• விஜயா ராஜன்

அவனைத் திருப்திப்படுத்த கடைக்குப் போனோம். பிஸ்கெட் கலரில், ஆனந்தா நீல பார்டரில், சிவப்பு வட்டம், ஜரிகை வட்டம் என்று மாறி மாறி டிசைன். புடைவை வெகு அழகு.

"அம்மா.... இந்தப் புடைவை எடுத்துக்கோ... ரொம்ப அழகா இருக்கு...'' என்றான்! எனக்கும் பிடித்தது. விலை 137 ரூபாய். அதாவது 100 + 37 ரூ! அவனைப் பொறுத்தவரை, அவன்தான்

எனக்குத் தீபாவளிக்குப் பட்டுப் புடைவை வாங்கிக் கொடுத்ததான பெருமிதம்!

அதற்குப் பிறகு எத்தனையோ பட்டுப் புடைவைகள்! பழையதாகி விட்டாலும், இன்னும் என அன்பு மகன் வாங்கிக் கொடுத்த பட்டுப் புடைவையை பொக்கிஷமாகப் போற்றி, காப்பாற்றி வைத்திருக்கிறேன்!

- விஜயா ராஜன்,
பெங்களூர்.

## பிரசுரத்துக்குத் தேர்வானவை

# பலே பொருத்தம்!

என்னுடைய திருமணம் நாற்பத்து இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு சென்னையில் நடந்தது. எங்கள் திருமணங்களில் மணப்பெண்ணுக்கு கூறைப் புடைவையும், நிச்சயதார்த்தப் புடைவையும், மாப்பிள்ளை வீட்டினர் தான் எடுக்க வேண்டும். எங்கள் இரு குடும்பங்களும் ஏற்கெனவே நன்கு பழகியவைதாம். என்னை புடைவை எடுக்க கடைகளுக்கெல்லாம் என் பாட்டி அனுப்ப மாட்டார் (ஹூம்.... அந்தக் காலம்...!!) இதை நன்கு அறிந்திருந்த என் மாமியார், தாம் எடுக்கும் புடைவைகள் எனக்கும் பிடிக்க வேண்டுமே எனக் கவலைப்பட்டார். புடைவைக் கடை அதிபர், என் அப்பாவுக்கு நன்கு பழக்கமானவர் என்பதால், என் மாமியார் கடைக்குப் போய் கூறைப் புடைவைக்காக பத்துப் புடைவைகளும், நிச்சயதார்த்தத்துக்காக பத்துப் புடைவைகளும் தேர்ந்தெடுத்து வீட்டுக்குக் கொண்டு வருவது எனவும், அவற்றுள் எனக்குப் பிடித்ததை நான் எடுத்துக் கொள்வது என்றும் முடிவானது. அதன்படியே என் மாமியார், மாமனார், என் கணவரின் அத்தை யாவரும் கடைக்குப் போய், வகைக்கு பத்துப் புடைவை களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு வந்தார்கள்.

நான் அவற்றைப் பார்த்து, அலசி, ஆராய்ந்து கூறைப் புடைவைக்கு பச்சை நிற டிஷ்யூ புடைவையும், நிச்சயதார்த் தத்துக்கு அரக்கு நிறத்தில் ஜரிகை புட்டா போட்ட புடைவையையும் எடுத்தேனோ இல்லையோ, அவரது அத்தை ஓஹோ வெனச் சிரித்து, "மாமியார் மருமகள் பொருத்தம் மிகவும் பிரமாதம்" என்று கேலி செய்ய ஆரம்பித்து விட்டார். விஷயம் இதுதான்! என் மாமியாரும் அந்த இரண்டு புடைவைகளைத்தான் செலக்ட் செய்திருக்கிறார். அதோடு, நானும் அவற்றைத் தேர்ந்தெடுத்தால் எவ்வளவு நன்றாக இருக்குமென்று வருகிற வழியில் சொல்லிக் கொண்டி ருந்தார்களாம். அத்தை இதையெல்லாம் கூற, அங்கு எழுந்த சிரிப்புக்குக் கேட் கவா வேண்டும்?

- குமாரி சோமசுந்தரம்,
சென்னை - 85



• குமாரி சோமசுந்தரம்

# பானுவும் பச்சைப் புடைவையும்!

அந்தக் கரும்பச்சை யும் மஞ்சளும் சேர்ந்த பட்டுப் புடைவையை எப்படி மறக்க முடியும்? சுமார் முப்பது வருடங்





• கீதா கோபாலன்

களுக்கு முன், 1970களில் கோவையில் வங்கியில் வேலை பார்த்துக் கொண்டிருந்தபோது, நானும் ஒய்.டபிள்யூ.சி.ஏ.வில் இரண்டு வருடம் ஒன்றாக இருந்த தோழி பானுவும், ஒரே மாதிரி வாங்கிக் கொண்ட புடைவையல்லவா அது!

கோவை ஆர்.எஸ்.புரத்தில் புதிய ஜவுளிக் கடை திறப்பு விழாவுக்கு, வங்கியில் எல்லோருக்கும் அழைப்பு வர, மாலையில் பானுவும், நானும் புறப்பட்டோம். "நாமிருவரும் ஒரே மாதிரி புடைவை வாங்கிக் கொண்டால் என்ன?" - இது நான்.

"வாவ், சூப்பர் ஐடியா" என பானு ஆமோதிக்க, இரண்டு மணி நேரம் அலசி ஆராய்ந்து, சிம்பிளான பச்சை, மஞ்சள் பட்டுப் புடைவையுடன் ஹாஸ்டலுக்கு வந்து சேர்ந்தோம்.

புடைவை வாங்கிய நேரம், எனக்கு நான் கேட்டபடி வேலூருக்கு மாற்றல் வந்தது. ரிலீவிங் பார்ட்டியன்று நானும் பானுவும் ஒரே மாதிரி புடைவையில். இரண்டு வருடம் கழித்து பானுவை அவள் திருமணத்தில் சந்தித்தேன். வருடங்கள் பல கழிந்தன. என் திருமணம், குழந்தை என எப்போதாவது கிரீட்டிங்ஸ் பரிமாற்றத்தோடு சரி. இருவருக்கும் தொடர்பு குறைந்து போனது. பச்சைப் புடைவையும் பழசானது.

1992 என ஞாபகம். சென்னை நேரு பார்க் அருகில் இருக்கும் ஆயுர்வேத வைத்தியசாலைக்கு, என் மகனுடன் சென்று விட்டு பஸ்ஸுக்காகக் காத்திருந்தேன். அன்று நான் உடுத்தியிருந்ததோ அதே பழைய பச்சைப் புடைவை. பஸ் ஒன்று வந்து நிற்க - ஒரு சிறுவனின் குரல், "அம்மா அம்மா, உன் புடைவை பாரு" பஸ் கிளம்பி விட்டது. உடனே தொடர்ந்து, "கண்டக்டர் கொஞ்சம் பஸ்ஸை நிறுத்துங்களேன்" எனக் கூக்குரலிட்டு பஸ்ஸை விட்டு இறங்கினாள் பானு தன் மகனுடன். கேட்பானேன் சந்தோஷத்துக்கு.

பக்கத்து ஹோட்டலில் உட்கார்ந்து பழைய, புதிய கதைகளைப் பேசி, குமரிகளாகவே மாறிய எங்களைப் பார்த்த இரண்டு பையன்களுக்கோ ஆச்சரியம் தாங்கவில்லை. விட்டுப் போன நட்பு, பட்டுப் புடைவையால் அடையாளம் காணப்பட்டு, தொடர்கிறது மறுபடியும். வாழ்க பச்சை பட்டுப் புடைவை!

- கீதா கோபாலன்,
சென்னை - 75.



"சிக்னல்ல பிச்சை எடுத்திட்டு நின்னவனைத் திடீர்னு எங்கே காணோம்?"

"சிக்னல் விழுந்ததும், ஸான்ட்ரோல ஏறிப் போயிட்டான்!"

- பம்மல் நாகராஜன்



படம்: பரமேஸ்வரகுமார்

# அம்மான்னா சும்மாவா!

பாவாடை சட்டை அணிந்து, இரட்டை ஜடையில் வரும் சரண்யாவைப் பார்த்து, "நீ ஒரு காதல் சங்கீதம்" என்று 'நாயகன்' கமல் பாடியது நேற்றுதான் போலிருக்கிறது. அதற்குள் அடுத்த இன்னிங்ஸ் எடுத்து, சிம்பு, ரவி கிருஷ்ணா என்று இளம் கதாநாயகர்களின் அம்மாவாக, அக்காவாக விளாசிக் கொண்டிருக்கிறார் சரண்யா! இன்றைய தேதிக்கு, சொந்தக் குரலில் பேசக்கூடிய, குடும்பப்பாங்கான, இளமை மாறாத அம்மா நடிகைக்கு வேறு நல்ல சாய்ஸ் இல்லை என்பதால், 'அயோத்தியா', 'ராமகிருஷ்ணா', 'மீசைமாதவன்', 'ராம்', 'அடைக்கலம்', 'கோமதி நாயகம்', 'தவமாய்த் தவமிருந்து' என சரண்யா படு பிஸி!

"நரை பூச வேண்டியதில்லை. தொள தொள ரவிக்கையோ, கூனோ போட வேண்டாம். எங்களுக்கு இளமையான அம்மாதான் தேவை. நீங்க எப்படி இருக்கீங்களோ, அப்படியே வந்தால் போதும்"னு ஆரம்பத்துலயே சொல்லிட்டாங்க" என்று சந்தோஷமாக ஆரம்பித்த சரண்யா, மிகவும் எதிர்பார்ப்பது 'ராம்', 'தவமாய்த் தவமிருந்து' படங்களைத்தானாம்!

" 'ராம்' படத்தில் ஜீவாவோட அம்மா ரோல்! ரொம்ப யதார்த்தமா இருக்கும். அந்தப் படத்துக்கு டப்பிங் பேசும் போது "அட... நானா இது? என்னால கூட இப்படியெல்லாம் பண்ண முடியுமா?'னு அசந்து போயிட்டேன். டைரக்டர் அமீர் ரொம்பப் பிரமாதப்படுத்தியிருக்காரு. சேரனின் 'தவமாய்த் தவமிருந்து' படத்திலும் சூப்பர் கேரக்டர்! எனக்காகவே செஞ்சது மாதிரி அவ்வளவு பொருத்தம்" என்று சிலாகித்தார்.

இவ்வளவு பிஸியாக இருந்த போதிலும், சரண்யா விரும்பி மேடையேறும் நிகழ்ச்சி, ஜெயா டி.வியின் 'மகளிர் மட்டும்'!

"அவ்வளவு பெரிய மகளிர் கூட்டத்தை, ஹேண்டில் பண்றது சுலபமான வேலையில்லை. ஆனால் நான் ஆட்டம் பாட்டம்னு அசத்திடறதா பாராட்டறாங்க. பார்க்கத்தான் சாதுவா இருக்கேன். ஆனா உள்ளுக்குள்ளே உற்சாகமான கேரக்டர்! அதான் கிளிக் ஆயிடுச்சு. நான் வாக்கிங், ஷாப்பிங்னு வெளியே போனாலே, 'கும்தலக்கடி கும்மாவா... பொம்பளைங்கன்னா சும்மாவா?'னு ஜாலியா குரல் கொடுக்கறாங்க" என்று மகிழ்ந்தார் சரண்யா!

ஆஹா! சரண்யா தேர்தல்ல நின்னா, மகளிர் வோட்டு அப்படியே பாக்கெட் ஆயிடும் போலிருக்கே!

- ஜெயஸ்ரீ



# அள்ளிக்கொடுத்த அன்னை!

ஒருமுறை பெங்களூரில் எம்.எஸ். கச்சேரி செய்ய வந்திருந்தார். ரசிகர் கூட்டம் அலைமோதியது. அன்று சாலையில் போக்குவரத்து நிறுத்தப்பட்டது. ஒரு கர்நாடக இசைக் கச்சேரிக்காக போக்குவரத்து நிறுத்தப்பட்ட அதிசயத்தை, நான் அன்றுதான் முதன் முதலாகக் கண்டேன். இரண்டு கிலோ மீட்டர் தூரத்துக்குக் கார்களின் வரிசை. அடேயப்பா! என்ன கூட்டம்! என் வாழ்நாளில் மறக்க முடியாத நிகழ்ச்சி அது.

பம்பாயில் என் வீட்டுக்கு வரும் சமயங்களில் நிச்சயம் உணவருந்திவிட்டே போவார். சமையல் ஆகிக் கொண்டிருக்கும்போது மெல்ல என் மனைவியின் காதுகளில் "காரம், புளி வேண்டாம்" என்று கிசுகிசுப்பார். அவருக்கிருக்கும் உரிமைக்கு அவர் கட்டளையே இடலாம். ஆனா லும் மிக மெல்லிய குரலில், பக்குவமாகச் சொல்வதுதான் எம்.எஸ்.ஸின் தனிப் பண்பு.

- **ஏ.எஸ். ராமன்** எழுதிய கட்டுரையிலிருந்து
*(முன்னாள் ஆசிரியர் - இல்லஸ்ட்ரேடட் வீக்லி)*

அன்னை கஸ்தூரிபா காலமான போது காந்திஜிக்கு ஆறுதல் அளிக்கக் கூடிய ஏதாவது ஒன்றைச் செய்ய வேண்டுமென்று, சில முக்கியஸ்தர்கள் கூடி யோசனை செய்தனர். அந்த முக்கியஸ்தர்கள் ராஜாஜி, கல்கி கிருஷ்ணமூர்த்தி, சதாசிவம்-எம்.எஸ். சுப்புலக்ஷ்மி தம்பதியர் மற்றும் தமிழ்நாட்டில் காந்திஜியின் ஹரிஜன இயக்கத்தை நடத்தி வந்த எல்.என். கோபாலஸ்வாமி. காந்திஜியின் அனுமதியுடன் கஸ்தூரிபா நினைவு நிதி ஒன்றை ஆரம்பிக்க வேண்டும் என்றும், எம்.எஸ். தமிழ் நாட்டில் சில இடங்களில் கச்சேரி செய்து அதில் வசூல் ஆகும் முழுப் பணத்தை யும், கஸ்தூரிபா காந்தி நினைவு நிதிக்காக காந்திஜியிடம் அளிப்பதென்றும் முடிவு செய்தார்கள்.



• பாரதிய வித்யாபவனில் நடந்த 'எம்.எஸ். சிரத்தாஞ்சலி' நிகழ்ச்சியில்...
(படம் : யோகா)

கச்சேரி நடந்த ஐந்து ஊர்களிலும் ஒன்றை ஒன்று மிஞ்சும்படி கச்சேரிகளை கட்டியதுடன், வசூலும் ஜோராக இருந்தது. கச்சேரிகள் முடிந்த சில நாட்களில் கோபாலஸ்வாமி, எம்.எஸ். கச்சேரிகள் மூலம் ரூபாய் ஒரு லட்சத்துக்கும் அதிகமாக வசூல் ஆயிற்று என்றும், இந்தப் பணம் சீக்கிரமே காந்திஜியிடம் வழங்கப்படும் என்றும் பத்திரிகைகள் வாயிலாகத் தெரிவித்திருந்தார். (அந்தக் காலத்தில் ஒரு லட்சம் ரூபாய் என்பது இன்றைய ஒரு கோடி ரூபாய்க்குச் சமம்).

## எம்.எஸ். நினைவுகள்

இந்த இசை நிகழ்ச்சிகள் ஒரு மகத்தான முன் உதாரணம்.

மயிலை கபாலீஸ்வரர் கோயில் புனருத்தாரணத்துக்காகவும் அதைத் தொடர்ந்து கும்பாபிஷேகத்துக்காகவும், சென்னையில் ஒரு கச்சேரி செய்து அந்தப் பணம் மொத்தத்தையும் கோயிலுக்கு அளித்தார்.

இன்ப கானத்தையும், தாராள



* ராதாவிஸ்வநாதன், திருமதி. ஏ.எஸ்.ராமனுடன் எம்.எஸ்.

நிதி உதவியையும் அள்ளி அள்ளிக் கொடுத்த அன்னை, இன்று நம்மிடையே இல்லை என்பதை உள்ளம் ஏற்க மறுக்கிறது.

- கோபு, சென்னை-20

நெற்றி நிறைய குங்குமத்தையும் முகம் நிறைய கண்ணியத்தையும் சுமந்து கொண்டு, அந்தத் தாய் 'தேவாதி தேவா சதாசிவா' என்று பாடும்போது, வைர மூக்குத்தியின் மின்னலும், நாண மின்னலும் முகத்தில் இழையோடியதைப் பார்த்திருக்கிறேன். அர்த்தம் தெரியாத, ராகம் தெரியாத என்னையும், ஆனந்த பரவசத்தோடு ஆகாயத்தில் பறக்க விட்ட அந்த அன்னையின் ஆத்ம சாந்திக்காக இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

- அமானுல்லா,
கொச்சி

தேனினும் இனிய குரலால் மனதை உருக்கும் வண்ணம் அவர்கள் பாடும்போது மற்றவர்கள் மனத்தைத் தொட்டு கண்களைப் பனிக்கச் செய்வது எதனால் என்றால் அவர்களது ஆத்மானுபவமேதான் (ஈலா கனி விவரிம்பலேனு சால ஸ்வானுபவவேத்யமே) அதை ஒரு வேள்வியாகவே செய்து வந்தார். அவரது அடக்கம், காஞ்சிமுனிவரிடம் அவர் வைத்திருந்த எல்லையற்ற பக்தி, கணவரிடம் கொண்டிருந்த பெருமதிப்பு, விளம்பரமின்றி வாரி வழங்கும் வள்ளல் தன்மை என எத்துணை நற்குணங்கள்! பட்டங்களும் விருதுகளும் அவரை அடைந்து பெருமை பெற்றன என்றால் மிகையாகாது.

- தஞ்சை, கல்யாணபுரம்
ஆராவமுதாச்சார்யார்

"அய்யய்யோ! என் செல்லம்! நீ எங்கப்பா இருக்கே? இந்தப் பாவிக்கு தெரியலையே கண்ணு! டேய் சம்முவம்!"

"தே! தூரப் போம்மே... உள்ள வராத. இன்ஸ்பெக்டர் ஐயா பார்த்தா பிச்சிடுவாரு. மரியாதையா எட்டப் போயிடு"

"அய்யா.... அய்யா! எம்புள்ள மொவத்தப் பார்க்கணும்யா. எப்பிடிச் சோர்ந்து போயி கெடக்கிறானோ தெரிலய்யா. ஒரு வேளை பசிதாங்க மாட்டானே. கூழுன்னாலும் வயிறு முட்டக் குடிக்கணும்யா அவனுக்கு. இந்த நாலு நாளா என்ன சாப்பிட்டானோ? கண்ணு! அய்யோ! இந்தக் கோலத்தில் உன்னைப் பார்க்கவா தவமா தவமிருந்து பெத்தேன்?" அவளுக்கு அழுகை வெடித்தது.

"ஏய் சனியனே! உள்ள இன்ஸ்பெக்டர் ஐயா இருக்கிறாரும்மே. நீ இங்க நிக்கணும்னா வாயைப் பொத்து. இல்லே கேட்டுக்கு அந்தாண்ட இழுத்துட்டுப் போயி தள்ளிடுவேன்."

"சரிங்கய்யா. சரிங்கய்யா." - அவள் கையால் வாயைப் பொத்திக் கொண்டு அடக்க ஒடுக்கமாய் நின்றாள்.

"ஆமா... பேரு இன்னா?"

"சம்முவம்யா.. சம்முவம். நெடு நெடுன்னு உசரமா, ராசா மாதிரி இருப்பானே, எங்க அப்பாரு சாடை... பார்த்தா கூலிக்காரன் வூட்டுப் புள்ளன்னு யாரும் சொல்ல முடியாதுய்யா, அம்மாம் அயவு."

"சம்முவமா? சம்முவம். ஓ! சண்முகம். காலேஜ் படிக்கிற பையன். செக்ஷன் 302. எப்பா, கிட்டவே நெருங்க முடியாது. பெரியகேஸு. சரி வா, கம்பிக்கு இருபதடி தள்ளி, இதோ இங்க நின்னு பாரு! அதோ எட்டாம் நெம்பர் செல்லுல



# சம்முவம்

முதுகைக் காட்டிக்கிட்டு உட்கார்ந்திருக்கான் பாரு. அதான் சண்முகம் தெரியுதா?"

அவள் கண்களை இடுக்கிக் கொண்டு பார்த்தாள். துக்கம் தாளாமல் அங்கேயே 'தப்தப்' என்று மார்பில் அறைந்து கொண்டு அழ ஆரம்பித்தாள்.

"அட எஞ்செல்லம்! எந்தப் பாவி கண்ணு பட்டுச்சோ, நம்ம குடும்பத்தில இப்பிடி இடி வந்து எறங்கிடுச்சப்பா. எப்பா!

ஆமா... பேரு இன்னா?

சம்முவம்யா.. சம்முவம்!

நீ பெரிய படிப்பு படிச்சுட்டு பெரிய ஆபீஸரா வரப் போற, எங்க கஷ்டத்தையெல்லாம் புடிங்கிக்கப் போறேன்னு நானும் உங்கப்பனும் அங்க கெனாக் கண்டுக்கிட்டு கெடக்குறோமே. நீ இந்த கதிக்கு ஆளாயிட்டியே



செய்யாறு தி.தா.நாராயணன்

எஞ்சாமீ! இந்த வேலைய நீ செய்யலாமா? தர்ம தொரை அவருக்குப் பொறந்துட்டு, நீ செய்தது தகுமா? அக்கா தங்கச்சிங்களோட பொறக்கலியா நீ? ரெண்டு தங்கச்சிங்க வூட்ல வெல போவாம கெடக்குதுங்களே, தெருப்பை மடியில கட்டிக் கெடக்கிறோமே. நீ சம்பாரிச்சி அதுங்களக் கரை சேர்க்கப் போறேன்னு நம்பிங்கெடக்குறோமே. ஊர்ல மூச்சுக்கு மூச்சு உன் பெருமையைச் சொல்லிட்டுத் திரியறாங்களே உங்கப்பன். எல்லாம் பொய்யாப் போச்சே."

ஏட்டு அதட்டினார்.

"ஏய்! சும்மாயிருக்கமாட்டே. ஆமா உம்புள்ள இன்னா படிப்பு படிச்சான்?"

"இன்சினீர் சாமீ! ஏட்டய்யா... எங்க கும்பல்ல எவன் இப்பிடி டவுனுக்கு வந்து இன்சினீர் படிப்புப் படிச்சான்? கஞ்சிக்கு செத்த சனம்யா. எல்லாம் கூலி வேலை. பொழுது சாய்ஞ்சா சாராயம் குடிப்பானுங்க. ஊர்ல சாவுன்னா மோளந் தட்டுவானுங்க. இதான் பொயப்பு. ஆனா என்வூட்டு ஆம்பள சத்தியவான்யா. சாராயத்தை மோந்து கூட பார்க்காது தெரியுமா? எம்புள்ள மட்டும் கம்மியா? இஸ்கோல்லயே பர்ஸ்டு மார்க்கு எடுத்தானாமில்லே? வாத்திமார்லாம் சொல்லவுட்டுத் தானே ஆவறது ஆவட்டும்னு, அவரு இவனை காலேஜுல சேர்த்தாங்க? எல்லாம் போச்சே!"

"அய்யா... அய்யா! நீங்களாவது அவனைக் கூப்பிடுங்களேன். எம் பக்கம் திரும்ப மாட்டேன்றானே. அவனுக்கு எம்மேல கோவம் அதான். பின்னே? அவனை ஜெயில்ல அடைச்சி நாலு நாள் ஆச்சி. பெத்தவ இன்னிக்குத் தானே வந்திருக்கேன்?"

"ஆனா நான் செத்தால்கூட இவன் மொகத்தில முழிக்கக் கூடாதுன்னு தீர்மானமா இருந்தேன்யா. இவங்கப்பன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாங்க. எனக்கு மனசு ஏத்துக்கலய்யா. அவனைப் பெத்த இந்த வயித்தத்தான் குத்திக்கணும். பேப்பர்ல இவன் போட்டோவைப் போட்டு கொலைகாரன்னு போட்டிருந்துச்சே! என் ஜென்மமே அழிஞ்சிப் போச்சிய்யா. இதுக்கா தவமா தவமிருந்து பெத்தேன்? அய்யா! ஏட்டய்யா! எட்டு வருசமா எங்களுக்குக் கொழந்தை இல்லை. எத்தினி பச்சிலை, எத்தினி பத்தியம்? விரிஞ்சிபுரம் கோவில்ல நடுராத்திரியில தலையில பச்சைத் தண்ணி ஊத்திக்கிட்டு, வெடவெடன்னு குளிர்ல, புள்ள வரம் கேட்டு உருண்டுங் கெடந்தேன்யா. கைய பின்னால கட்டிக்குனு, மண்சோறு தின்னேன். அப்படி பெத்த பிள்ளைய்யா இவன்" சொல்லிவிட்டு கொஞ்ச நேரம் முந்தானையால் வாயைப் பொத்திக் கொண்டு அழுதாள்.

"எம்மாங் கஷ்டத்தில பெத்தவங்க நம்மள படிக்க வைக்கிறாங்க. குந்த ஒழுங்கா ஒரு குடிசை இருக்குதா? வேலைக்குப் போனாத்தானே சோறு, இல்லைன்னா தண்ணி குடிச்சிட்டுத்தானே படுக்கணும், எத்தையும் யோசிக்காம, பொறுக்கி மாதிரி பொண்ணுங்களக் கிண்டல் பண்ணானாம், கையைப் புடிச்சி இழுத்தானாமே, ஒருத்திய ஓட ஓடத் தொரத்தினானாமே. அய்யோ, சம்முவமா? அந்தப் பொண்ணு பஸ்ல விழுந்து செத்துப் போச்சாமே. அய்யோ கேக்கறப்பவே என் அங்கம் பதறுதுய்யா. அவளைப் பெத்தவங்க வயிறு எப்படி எரியும்? அவங்க சாபம் வுட்டா நாம தாங்க மாட்டோம்யா. வேணாம் இந்தப் புள்ளைய நான் பெக்கலன்னு இருந்துட்டேன். 'அடிப்பாவி! நாமளும் கைவிட்டுட்டா, அப்புறம் அவனுக்கு யாருடி ஆதரவு?'ன்னு என்னைத் திட்டிப்புட்டு அவுக மட்டுந்தான் ஓடியாந்தாக."



"அதுவா... வடைக்கு ஓட்டை போடுறப்போ கொஞ்சம் பெரிசா போயிடுச்சு. அவ்வளவுதான்!"

"என்னப்பா சர்வர்... சாம்பாரில் வளையல் மாதிரி ஏதோ கிடக்கே?"

- ஏ.கே. நாசர்

"அய்யோ! செல்லம், இந்தப் பாவிய மன்னிச்சிக்கப்பா. அப்புறந்தான் இந்த புத்தி கெட்டவளுக்கு உம்மனசு தெரிஞ்சது தொரை. பெத்தவளுக்கு புள்ளையப் பத்தி தெரிய வேணாம்? தெரிஞ்சிக்கலியே. அம்மா மொகத்தில எப்படி முழிப்பேன்னு தலைதலைன்னு அடிச்சிக்கிட்டு அழுதியாமே. அதான் ஓடி வந்துட்டேன் கண்ணு! எழுந்து கதவோரம் வாப்பா!"

சற்றுகிட்டே போனவளை கான்ஸ்டபிள் வந்து துரத்தினார்.

"உன்னை உள்ள விட்டது தப்பு. கொலைக் கேஸ்" இது, யாரும் கிட்ட போவக்கூடாதுன்றேன். இங்க வந்து ஒப்பாரி வெக்கறியே. போம்மே அந்தாண்ட. பாவம், சும்மா போன பொண்ணை துரத்தித் துரத்தி கொலை பண்ணியிருக்கான் ராஸ்கல். தோ பார் கிட்ட வந்தே, உதைதான்!"

"அய்யா! கொலைகாரன்னு நீங்களே பேர் வெச்சிடாதீங்க. அவன் அப்பா கிட்ட எல்லாத்தையும் விலாவாரியா சொல்லிட்டு அழுதிருக்கான்யா. காலேஜ் பசங்க ஒண்ணுக் கொண்ணு ரவுசு பண்றப்ப, அந்தப் பொண்ணு இவனை கருப்பன்னு சொல்லியிருக்கு. சாயங்காலம் எம்புள்ள அதைத்தான் ஏன்னு கேட்டிருக்கான். அவ பயந்து போயி கேட்டைத்தாண்டி வெளிப்பக்கம் ஓடியிருக்கா. அப்பத்தான் பஸ்ல மாட்டி... எல்லாம் ஆகிப் போச்சிய்யா. அந்தப் பொண்ணு பேரு, ஊரு, இன்னா படிக்குது அவனுக்கு எதுவுமே தெரியாதாம்யா. அய்யோ, 'அது எனக்கு என்ன பாவம் பண்ணுச்சி? என் கண்ணெதிரிலேயே பஸ்ல மாட்டி, சக்கரத்துக்கிழே அரைப்பட்டு, ஒரு நிமிஷத்தில கூழாயிட்டாப்பா. அத என்னால மறக்க முடியலப்பா. நாந்தாம்பா கொன்னுட்டேன்'னு அவன் அப்பா கிட்ட கதறிட்டானாம்யா. கண்ணே! சம்முவம் அத்த மறந்துடுப்பா. புத்தியறிஞ்சு செஞ்சா, அது தப்பு. இது விதிப்பா விதி."

"ஏட்டய்யா, நீங்களாவது அவன் கிட்ட சொல்லுங்க. வெடலப் பசங்க ஒருத்தருக்கொருத்தர் ரவுசு பண்றது ஊர்ல ஒலகத்தில நடக்கிறதுதான். கழனிகாட்டில நடவு, அறுப்பு சமயம் வந்து பாருங்க நடக்கிற கூத்தை. அந்தப் பொண்ணு திடீர்னு வெளியே ஓட்னதுக்கு இவன் என்ன பண்ணுவான்? அப்பவும் ஓடாதன்னுதான் கத்தியிருக்கான். ஏட்டய்யா! அறியாத புள்ளை, ஏதோ செஞ்சிடுச்சி. இந்த கெழவிக் கோசரம் மன்னிச்சுவுட்றுங்க சாமி.

டேய்! சம்முவம்! எழுந்து கதவுக்கா வாடா கண்ணு!"

"யோவ்! இந்தப் பொம்பளைகிட்ட இன்னா கேப்மாறித்தனம் பார்த்தியா? புள்ளன்றதால ஒரு நொடியில ஞாயத்தை திருப்பிப் போட்டுட்டா பாரு. படிக்கிறவன் செய்ற வேலையா இது? அவன் அழுதுட்டா, போன உசுரு திரும்ப வந்துடுமா?'' - ஏட்டு, கான்ஸ்டபிள் கிட்ட சொல்லிக்கிட்டிருந்தார்.

இப்போது அவள் எட்டாம் நெம்பர் செல்லை நெருங்கிவிட்டாள். கான்ஸ்டபிள் பார்த்துவிட்டு லட்டியை ஓங்கிக் கொண்டு ஓடிவர, திரும்பவும் வராண்டாவுக்கு ஓடிவந்துவிட்டாள்.

அவசர அவசரமாய் முந்தானையை அவிழ்த்து, கசங்கியிருந்த ஒரு ஐம்பது ரூபாய் நோட்டை எடுத்து பயத்துடன் நீட்டினாள்.

"ஒருவாட்டி ஜெயிலைத் தொறந்து வுடுங்கய்யா. எம்புள்ளைக்கு எவ்வளவு தான் கோபமிருந்தாலும் நான் பெரியவனேன்னு கிட்டக்கப் போயி அவனைத் தொட்டா சிரிச்சிப்புடுவான்யா. புள்ளை இப்ப புத்தி கலங்கிக் கிடக்கிறாப்பல இருக்குதே. என்னைப் பார்த்துட்டா சரியாயிடுவான்யா. நான் வரலன்றதுதான்யா அவனுக்கு மனக் கஷ்டம். டேய் சம்முவம்! கண்ணே! இர்றா, நானே அங்க வர்றேன். மனசை தளரவுட்றாதப்பா. தைரியத்த வுட்றக் கூடாது. ஏட்டய்யா! தொறந்து வுடுங்க. அஞ்சி நிமிசத்தில போனது வந்தது தெரியாம வந்திட்றேன்." அவள் கை இன்னமும் ஐம்பது ரூபாயை நீட்டிக் கொண்டிருந்தது. கான்ஸ்டபிள் அவளை அங்கியே நிற்கும்படி சைகை காட்டி விட்டு உள்ளே சென்றான்.

"**சா**ர்! அந்தப் பொம்பள கதவைத் திறந்துவிடச் சொல்லி ஆர்ப்பாட்டம் பண்ண ஆரம்பிச்சுட்டா. அந்தோணி ரிக்ஷா ரெடியா நிக்குது அய்யா!"

"உம்... இப்ப டியூட்டி டாக்டர் யார்யா?"

''சொர்ண ரேகாம்மா சார்! ரெடியா?ன்னு போன் பண்ணாங்க சார்! சீக்கிரம் முடிச்சுடலாம். பிரஸ்ஸுக்கு சொல்லிடட்டுமா சார்!''

''எங்கேய்யா அந்த எய்ட்டீன் ஃபார்ட்டி? மொதல்ல உங்க ரெண்டு பேரையும் கட்டி வெச்சி உதைக்கணும்யா. இவன் காலேஜு பையன், தடால் புடால்னு எதையாவது செய்துடற வயசு, நாமதான் உஷாராயிருந்திருக்கணும். ராத்திரி ரெண்டு பேரும் எங்கய்ய போனீங்க?''

''கொஞ்சம் கண் அசந்துட்டோம் ஐயா!''

"உம்... எஸ்.பி. ஆபீஸுக்கு தகவல் போயிருக்கு. வருவான் உன் மாமன், அப்ப சொல்லு, கண் அசந்துட்டோம் அய்யா! அந்த நேரத்தில பையன் மாட்டிக்கிட்டு தொங்கிட்டான். நாங்கதான் பாடிய எறக்கி சாத்தி வெச்சிருக்கோம்னு. என்னென்ன நடக்கப் போவுதோ? கடவுளே!'' அவர் முகத்தில் கலவரம் மண்டிக்கிடந்தது.

"நடந்ததைச் சொன்னா ஒருத்தன் நம்புவானா? நாம தான் அடிச்சி மாட்டிட்டோம்னு ரகளை பண்ணப் போறானுங்க."

**உ**டைந்த குரலில் "சம்முவம் டேய் கண்ணே'' என்று அவள் இன்னமும் கத்திக் கொண்டிருக்கிறாள். ஓடிப்போய் அவனைக் கட்டிக் கொண்டு மனபாரம் தீர அழ வேண்டும் அவளுக்கு. அடுத்து அதுதானே நடக்கப் போகிறது? ●



# தங்கம் தேன்சி

• நடாஷா

புத்தாண்டு தினத்தன்று அண்ணா சாலையில் அப்படியொரு ட்ராஃபிக் ஜாம். 'கொண்டாடினால் ஸ்பென்ஸர் ப்ளாஸாவில்தான் நியூ இயர் கொண்டாட வேண்டும்' என்று, அத்தனை நடமாடும் ஆப்பிள்களும் ஆசைப்பட்டதன் விளைவு இது.

ஒரு வழியாக அடித்துப் பிடித்து ஸ்பென்ஸருக்குள் நுழைந்தால், ஆளைத் தூக்கும் பெர்ஃப்யூமில் ஜீன்ஸ், சுடிதார் அணிந்தபடி, வயலின், கிடார், சாக்ஸஃபோன்களெல்லாம் 'ஜம்' என்று எஸ்கலேட்டர் வழியாக உளர்ந்து சென்று இசை உலகத்தில் (மியூசிக் வோர்ல்டு) நுழைந்து, ஸ்பீக்கர்களில் கதறிக் கொண்டிருந்த ரிக்கி மார்டினிடம் மெய்மறந்து கொண்டிருந்தனர். அப்பொழுது ஆடிய தலைகளும் ஸ்டெப் போட்டுக் கொண்டிருந்த கால்களும், வாரே வாஹ்! பக்கா



• பெபீனா

மில்லினிய அடையாளங்கள்.

இங்கிலீஷ்

# வைரம்... ன்னம்!

ஆல்பம் செக்ஷனில் தஸ்ஸு புஸ்ஸு என பீட்டரிங் விட்டுக் கொண்டிருந்த ஃபெமீனா, ஃபெயிஷா, நடாஷா மூவரையும் என்கௌண்டர் செய்தோம்.

"உங்களுக்கெல்லாம் மெலடி பிடிக்கும்தானே?"

"நோ யா... (இதென்ன நோயா?) மெடாலிக் ராக் மியூசிக் மேல அப்படியொரு காதல் வெச்சிருக்கோம். பேக் ஸ்ட்ரீட் பாய்ஸ், லாஸ்ட் கெட்ச் அப்.. யூ நோ வி ஆர் யூத்ஸ், சும்மா தடதடன்னு கேக்குற பாட்ல காலு ரெண்டும் தன்னால ஆடணும்."

"கொஞ்சம் தமிழ்ப் பாட்டும் கேட்கலாமே?"

"கேட்கலாமே. பாய்ஸ் அப்புறம், ஹே, என்ன பேர்ப்பா, ஆங் காக்க காக்க, ஆயுத எழுத்து இதெல்லாம் ஒரு வாட்டி பாதி ஸாங்ஸ் கேட்டிருக்கோம்."

இவர்கள் நிச்சயம் தமிழ்ப் பாடல்களைக் கேட்பார்கள் என்பது போலிருந்த ஆனந்தி, ஆர்த்தியிடம் ஆஜரானோம்.

"வணக்கம்."

"ஹாய்" (போச்சுடா!)

"ஏங்க, இந்த ரிக்கி மார்ட்டின் ஜெனிபர் லோபஸ், கிறிஸ்டினா அகிலேரா..."

"ஹலோ, நாங்க தமிழ்ப் பொண்ணுங்கதான். கர்நாடிக் மியூஸிக்னா அப்படி உயிரா கேட்போம். இப்பகூட எம்.எஸ். ஆல்பம், கர்நாடிக் ஃப்யூஷன் மியூசிக் கேஸட்ஸ் வாங்கதான் வந்திருக்கோம். நம்ம கல்ச்சர்லயே அற்புதமான இசை இருக்கும்போது காதைப் பிளக்கிற பாட்டெல்லாம் எதுக்குங்க? வெஸ்டர்ன்ல டைட்டானிக் பிடிக்கும். அதிசயமா

* ஆர்த்திகா

* ஐஸ்வர்யா

* பூர்ணா



• ஆனந்தி

• ஆர்த்தி

• ஃபெயிஷா

மெலடியோட இருக்கிற ஒரே பாட்டு அது."

"ஆமா, நீங்க கர்நாடகமா வெஸ்டர்னா?"

"தெரியலையேப்பா. காதை வருடுகிற எதுவுமே நல் இசைதான் எமக்கு. உமக்கும் அப்படியே ஆகட்டும்." வாழ்த்துப்பா பாடியது ஜீன்ஸ்.

"செந்தமிழ் நாடெனும் போதினிலே" என்று ஜாலியாகி ஐஸ்வர்யா, ஆர்த்திகாவிடம் சென்றடைந்தோம்.

"வந்ததிலிருந்து உங்களை வாட்ச் பண்ணிட்டுதான் இருக்கோம். அழகான பொண்ணுங்களைப் பார்த்தா உடனே பேசிடுவீங்களே" - ஆர்த்திகா.

"ப்ச்... அதான் இப்போ இல்லையே."

"பழைய தமிழ்ப் பாடல்கள்தான் எப்பவும் தேன் கிண்ணம். அத்தைமடி மெத்தையடி... தன்னன்னா... ஆடிவிளையாடம்மா தன்னன்னா... நான் முழுக்கக் கேட்கலாம்ங்க. ஓல்டு ஈஸ் கோல்டு மட்டுமில்ல, டயமண்ட், ப்ளாட்டினம் எல்லாம் தான்."

'தனியே தன்னந் தனியே' என்று வந்திருந்தார் பூரணமான பூர்ணா. "ம்... நானெல்லாம் கல்கியில் வர்றேனா?" என்று வெட்கம் சிந்தினார்.

"பாடச் சொன்னா என்ன பண்ணுவீங்க?"

"கலகலன்னு சிரிப்பேன். ஏன்னா எனக்கு வாத்திய இசைதான் பிடிக்கும். பாடல் வரிகளோடு கேட்பதைவிட இது மாதிரியான இசைக்கருவிகளின் நாதங்களா கேட்டிங்கன்னா, சங்கீதம், ஐஸ்க்ரீம் மாதிரி இனிக்கும்." சிரிப்பில் சலங்கை ஒலித்தது.

ஆஹா... ஒருவர் கிழக்கு என்றால் இன்னொருவர் வடகிழக்கு. ஒருவர் மேற்கு என்றால் இன்னொருவர் தென்மேற்கு.

ரசனைகளில் ஆளுக்கொரு வாஸ்து மூலையில் நின்ற பெண்களிடம் பேசியதில், இறுதியில் நமக்கு என்ன பிடிக்கும் என்பது மறந்தே போனது.

நீதி : ஒரு பெண்ணுக்குப் பிடிப்பது எந்தப் பெண்ணுக்குமே பிடிப்பதில்லை!

- ச.ந. கண்ணன்

படங்கள் : ஸ்ரீஹரி

*Rtn. J. SUDHANANDHEN*

145, THIRUNAGAR, ERODE- 638 003
Ph : 0424 - 24 210796, 214779.
FAX : 0424 - 222379.

PRESIDENT : SOUTH INDIA SENGUNTHA MAHAJANA SANGAM, CHENNAI
VALLAL SABAPATHI MATRICULATION SCHOOL, CHENNAI

CHAIRMAN : RUAL SELF HELP PROJECT (2002 - 2003)
ROTARY DISTRICT CONFERENCE ( 2003 - 2004 )
R.I.DIST. 3200.

CORRESPONDENT : ERDOE SENGUNTHA COLLEGE, THUDAPATHI
M.P.NACHIMUTHU M.JAGANATHAN ENGINEERING COLLEGE, CHENNIMALAI
SENGUTHAR HIGHER SECONDARY SCHOOL, ERODE.
SENGUTHAR MATRICULATION HIGHER SECONDARY SCHOOL, ERODE.
SENGUTHAR GIRLS HIGHER SECONDARY SCHOOL, ERODE.
MOTTAPPAR MIDDLE SCHOOL Vallipurathampalayam
SENGUTHAR KALVI NILAYAM, ERODE.



**05/10/2004**

" DIAWIN " பிஸ்கட் அறிமுகப்படுத்தப்பட்டதிலிருந்து தொடர்ந்து சாப்பிட்டு வருகின்றேன். நீரிழிவு நோயாளிகள் தொடர்ந்து மருந்து சாப்பிட்டு வருபவர்களுக்கு. இது ஒரு மாற்று மருந்தாக இல்லாமல் தினசரி சிற்றுண்டியாக பயன்படுகிறது. நீரிழிவு நோய் கட்டுப்படுவதுடன். உடம்புக்கு தெம்பும் நாள் முழுவதும் சோர்வின்றி உழைக்கவும் பயனுள்ளதாக உள்ளது.



SITA / 04 / 020

**உலகில் உள்ள தொன்மை வாய்ந்த மியூஸியம் தியேட்டர்களில் நாட்டிய நிகழ்ச்சி நடத்தி வருகிறார் பரதக் கலைஞர் ப்ரியதர்ஷிணி கோவிந்த். அவரது அனுபவங்களில் சில...**

"ஃபிரான்ஸ் நாட்டில் உள்ள மியூசிக் கிமே (Musee guimet) என்பது உலகின் மிகப் பழைமையான மியூஸியம் தியேட்டர். அங்குள்ள ஏஷியன் ஆர்ட்ஸ் மியூஸியத்தில் நான் இரு முறை ஆடியிருக்கிறேன். பிரெஞ்சு மக்களுக்கு அருங்காட்சியகம் என்பது திருத்தலம் மாதிரி. அவற்றின் புனிதமும் தொன்மையும் கெடாமல், அவ்வளவு கவனமாகப் பாதுகாக்கிறார்கள். பரத நாட்டியம் போன்ற கலை நிகழ்ச்சிகள் நடக்கும் போது, இரண்டு மாதத்துக்கு முன்பேயே டிக்கெட்டுகள் புக் ஆகிவிடுகின்றன.

ஃபிரான்ஸ் நாட்டைச் சுற்றிச் சுற்றி, ட்ராவல் வேனிலேயே பயணம் செய்து, மியூஸியம் தியேட்டர்களாக, தொடர்ச்சியாக இருபது நாட்கள் ஆடியது நிச்சயம் கின்னஸ் சாதனைதான். திரிவேணி வேலுமோகன் என்ற பாண்டிச்சேரி தமிழர் ஏற்பாடு செய்திருந்தார். மூச்சு விடக் கூட நேரமில்லாமல், எங்கள் பரதக் குழு ஓடி ஓடி ஆடியதை நினைத்தால், இன்றைக்கும் மலைப்பாக உள்ளது. "உனக்கு 'சூறாவளி சலங்கைச் சுடரொளி' பட்டமே கொடுத்திருக்கலாம்" என்று என் கணவர் கிண்டல் செய்து கொண்டே இருந்தார்.

அமெரிக்காவில் தற்போது பாதுகாப்பு விஷயங்கள் எல்லாம் கெடுபிடியாகி விட்டதில் (இரட்டைக் கோபுரத் தாக்குதலின் எதிரொலி) முதல் குறி எங்களுக்குத்தான் வைக்கப்படும். மிருதங்கம், வயலின், தம்பூரா, ஜடை பில்லை, குஞ்சலம் போன்றவற்றை ஆதியோடு அந்தம் செக் செய்து விட்டு, அப்போதும் சந்தேகம் தீராமல், 'உர்' என்பார்கள். முதலில் எரிச்சலூட்டிய இந்த செக்கிங் அனுபவம், போகப் போகப் பழகிவிட்டது. இப்போதெல்லாம், நாங்களாகவே எல்லாவற்றையும் எடுத்து வைத்துவிட்டு, ஓர் ஓரமாக சமர்த்தாக கையைக் கட்டிக் கொண்டு நிற்கிறோம்.

ஸான் ஃபிரான்ஸிஸ்கோவுக்குப் போயிருந்தோம். விமானம் வந்து இறங்கி நெடுநேரம் ஆகியும் அமைப்பாளர்கள் யாரும் கண்ணிலேயே படவில்லை. பாஷையும் தெரியவில்லை. யாரை, என்ன கேட்டாலும், சின்ன புன்னகைதான் பதிலாக வந்ததில், வயிற்றில் புளி பேஸ்ட் கரைத்தது! தூரத்தில் கோமாளி போல வேடமிட்டிருந்த ஓர் ஆசாமி,



கையில் பூங்கொத்து ஒன்றை வைத்துக் கொண்டு, எங்களைப் பார்த்து சைகை காட்டி சிரித்துக் கொண்டிருந்தார். கடைசியில் பார்த்தால், அந்தக் கோமாளி தான் விழா அமைப்பின் சார்பாக வர வேற்க வந்தவராம்! "புதுமையான வர வேற்பாக இருக்கட்டுமேனு இப்படி செஞ் சோம்!" என்றார்கள்... அட, கோமாளிக் கூத்தே!

**வ**ட ஆப்பிரிக்காவில் 'துனிசியா' என் றொரு முஸ்லிம் நாடு உள்ளது. பிரெஞ்சும், அரபியும் பேசுகிறார்கள். எனக்கோ அந்த மொழிகளில் ஆனா ஆவன்னா தெரியாது. 'மெதினா டான்ஸ் ஃபெஸ்டிவல்' என்ற மூன்றே வார்த்தைகளை மந்திரம் போல ஜபித்துக் கொண்டே ஷாப் பிங்கைக் கூட செய்து முடித் தோம் என்றால், அது சாமர்த்தியம் தானே!

அந்த ஊர் முஸ் லிம் பெண்கள், நம் முடைய புடைவை, தலைப்பூ, புல்லாக்கு எல்லாவற்றையும் தொட்டுப் பார்த்து மலைத்து நின்றார்கள். அங்குமட்டுமல்ல... பல வெளிநாடுகளில் பரத நாட்டியத்துக்கு பெரிய வசீகரம் இருப்பதை உணர்கிறேன்.

"அது என்ன...? இது என்ன? இதை எங்கே கற்றுக் கொள்வது?" என்று ஆர்வ முடன் கேட்பார்கள். ஓரளவு பரதநாட்டி யம் தெரிந்தவர்கள், டெக்னிகலாகவும் சில சந்தேகங்களைக் கேட்பார்கள். அவற் றுக்கெல்லாம் என்னால் பல நேரங்களில் திருப்தியான, முழுமையான பதில்களைத் தர முடியாது. ஆனால் இந்த சீஸனில் அதற்கும் ஒரு தீர்வு கண்டுபிடித்து விட்டேன்.

"நானே ஆடி, விளக்கமாக விவரித்து, 'பரதநாட்டியம் வர்ணம், தி சம் அண்ட் சப்ஸ்டன்ஸ்' என்ற விஸிடி, டிவிடி முதன்முறையாக வெளியாகியுள்ளது. 'ஸ்வாதி ஸாஃப்ட் ஸொல்யூஷன்ஸ்' வழங்கியிருக்கும் இதில், தியரி, டெமான்ஸ்ட்ரேஷன், ரெஸிடல் என எல்லாமே உள்ளன. கிட்டத்தட்ட இரு நூற்று ஐம்பது வர்ணங்களைத் தேர்ந் தெடுத்து, அதில் பதினான்கை மட்டுமே மணி மணியாகப் பொறுக்கி கையாண் டிருக்கிறேன். www.kalakendra.com-ஐ தட் டியவர்களும் இரண்டாவதாக ஒரு குரு எப்போதும் கூடவே இருக்கும் வசதி யைத் தருவதாக, பாராட்டிக் கொண் டிருக்கிறார்கள்.

# புல்லாக்கைத் தொட்டுப் பார்த்து...

• தெற்கு பிரான்ஸில் உள்ள 'அல்பி' மியூஸியம்

புல்லாக்கைத் தொட்டுத் தொட்டுப் பார்த்து அதிசயித்து, முத்திரை பிடித்து ரசித்த அந்த முஸ் லிம் இளம் பெண் கள், இந்த சைட் டுக்களில் நுழைந்து பார்ப்பார்களா?

- ஜஸ்

# அருள்வாக்கு

வெள்ளம், எரிமலை, பூகம்பம், தீ விபத்து முதலான உத்பாதங்கள் ஏற்படுவதிலும் மற்றவர்களுடைய பரோபகார சிந்தனைக்கு பகவான் வைக்கிற பரீக்ஷையும் சேர்ந்திருக்கும். இம்மாதிரி நிவாரணப் பணிகளைப் பற்றி நான் இதுவரை சொல்லவில்லை. விசேஷமாக இதைப் பற்றிச் சொல்லி வற்புறுத்த வேண்டியதுமில்லை. இப்படி ஒரு பெரிய கஷ்டம் பல பேருக்கு ஏற்படுகிறது என்றால், யாரும் சொல்லாமலே பணத்தாலோ, சரீரத்தாலோ உதவி பண்ண வேண்டும் என்ற எண்ணம் அவரவருக்கும் பொங்கிக் கொண்டு வர வேண்டும். ஸர்க்கார், ரெட் க்ராஸ், ராமகிருஷ்ணா மிஷன் முதலானவர்களோடோ, அல்லது தாங்களாகவே ஸங்கமாகச் சேர்ந்தோ, அல்லது தனிப்பட்ட முறையிலோ, எப்படியானாலும் இந்த மாதிரியான - calamity களில் ஒவ்வொருவரும் பணி செய்ய வேண்டியது அவசியம். தனி மனிதனின் கஷ்டத்துக்கு மூலகாரணம் அவனுடைய பூர்வ கர்மா என்கிறாற் போலவே, இப்படிப்பட்ட விபத்துக்களையும் 'இயற்கையின் சீற்றம்' என்று இந்த நாளில் எழுதினாலும், இதெல்லாம் பொதுவாக மநுஷ்ய ஸமூஹம் முழுதுமே பண்ணும் பாபத்துக்காக, பகவான் தருகிற தண்டனைதான் என்று சாஸ்த்ரம் சொல்லும். தண்டனையாகப் பெற்று வருத்தப் பட்டுக் கொண்டேதான் அந்தப் பாபத்தை நாம் தீர்க்க வேண்டும் என்றில்லை. இம்மாதிரி ஸமயங்களில் நாம் பண்ணுகிற மனப்பூர்வமான கஷ்ட நிவாரணத் தொண்டாலும் பாபத்தில் பாக்கியிருப்பதைப் போக்கிக் கொண்டு விடலாம். இப்படித் தொண்டு செய்யாமல் கருங்கல் மாதிரி இருந்தால் அதுவே ஒரு பாபம்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்




**உங்கள் குழந்தைகளின்**
**மனம் கவர்ந்த**

# கோகுலம்

**பிப்ரவரி 2005**
**முதல்**

## புதிய வடிவமைப்பு,
## புதிய பொலிவு,
## புதிய பகுதிகள்,
## அதிக பக்கங்கள்

என அட்டகாசமாக
அதே விலையில் வெளிவர இருக்கிறது!

*வாங்கத் தவறாதீர்கள்!*

47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# நந்தவனத்து மந்திரம்!

“திருச்சியிலே ஒரு காலேஜ் இருக்கு. காலையிலே ஏழரை மணிக்கு ஆரம்பிக்கிறாங்க. இரவு ஒன்பது மணி வரை வகுப்புகள் நடக்குது. அதற்குப் பிறகு ஃபிளட் லைட்லே கிரிக்கெட், வாலி பால்னு மேட்செல்லாம் விளையாடு வாங்க. புத்தாண்டு, பொங்கலுக்குக் கலாட்டாவா கலை நிகழ்ச்சிகள்லே கலக்குவாங்க. டிகிரி முடிக்கிறதுக்கு முன்னாலேயே, எல்லார் கையிலேயும் பெரிய பெரிய கம்பெனியோட ‘கவர்ச்சிகரமான பிளேஸ்மெண்ட் ஆர்டர். அதிசயமான காலேஜ். வந்துதான் பாருங்களேன் பாஸ்” அன்பான அழைப்பிதழ் வந்தது.

பாக்கு வைச்சு அழைக்கிற கேம்பஸுக்கு படால்னு போய்



நின்னோம். திருச்சி பி.எச்.ஈ.எல். வளாகத்துக்குள்ளேயே இருக்கிற பாரதிதாசன் இன்ஸ்ட்டிடியூட் ஆஃப் மேனேஜ்மென்ட்க்குள் நுழைகிறோம். மரம், செடி சூழ பறவைகளின் ரீங்கார டிங்கோடு, பச்சைப்பசேல் என கம்பீரமாக நிற்கிறது அந்தக் கல்லூரி வளாகம்.

“வெல்கம் டு பாரதிதாசன் இன்ஸ்ட்டிடியூட் ஆஃப் மேனேஜ்மெண்ட் (செல்லமா ‘பிம்’) என்று கல்லூரியைச் சுற்றிக் காண்பித்தது ஒரு உற்சாகக் கும்பல்!

சி.டி கம்ப்யூட்டர், இன்டர்நெட் என சகல வசதிகளுடன் கூடிய ஏ.சி. வகுப்பறைகள், ஹைடெக் லைப்ரரி, ஃபிளாட் மாடலில் ஹாஸ்டல், ஒவ்வொரு அறையிலும் கம்ப்யூட்டர் என நவீன மயம்!

“ஹா.. இது நந்தவனம் பாஸ்! இப்படி ஒரு காலேஜ் கிடைச்சா, வீட்டு நினைப்பு வருமா என்ன?” என்கிறார் மிஸ் அனிதா... ‘பிம்’மைப் பொறுத்தவரை, குருகுலவாசப் படிப்புதான்!

“தமிழகத்தில் எம்.பி.ஏ. நிர்வாகவியல் படிப்புக்குச் சிறந்த கல்வி நிறுவனம் இல்லாத குறை, நீண்ட வருடங்களாகவே இருந்தது.

“1984ம் வருடம் பாரத் ரத்னா சி.சுப்ரமணியமும், பாரதிதாசன் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் மணி சுந்தரமும் அந்தக் குறைக்கு முற்றுப்புள்ளி வைத்தார்



கள். ‘பிம்’ தொடங்கப்பட்டது. இந்தியாவிலேயே முதன்முறையாக பி.எச்.ஈ.எல்.

போன்ற பொதுத்துறை நிறுவனத்தின் ஒத்துழைப்புடன், தொழிற்சாலைக்குள்ளேயே செயல்படும் முதல் நிர்வாகவியல் கல்வி நிறுவனம் 'பிம்'தான்!'' என்றார். இயக்குநர் எம். சங்கரன்.



* எம்.சங்கரன்



* லக்ஷ்மண் குமார்

''நிர்வாகப் பணிகளுக்குக் கிடைக்கிற மரியாதையும், எதிர்கால உத்திரவாதமும்தான், எம்.பி.ஏ. என்னும் மூன்றெழுத்து மந்திரத்தை, இளைஞர்களை உச்சரிக்க வைத்திருக்கிறது. எங்கள் கல்லூரியில் பயில இன்ஜினியரிங் படித்திருக்கணும் என்கிற அவசியமில்லை. பி.ஏ., பி.எஸ்ஸினு எந்த டிகிரி வேணுமானாலும் முடிச்சிருக்கலாம். ஆனால், நாங்க வைக்கிற நுழைவுத் தேர்விலே தேர்ச்சி பெறணும். அப்புறம் இரண்டு வருஷப் படிப்பு. நிதி நிர்வாகம், சந்தை நிர்வாகம், உற்பத்தித் துறை, மனித வள மேம்பாட்டு நிர்வாகம் மற்றும் தொழிற்சாலை நலன், சிஸ்டம்ஸ் என விருப்பத்துக்குரிய பிரிவில் பயிற்சி பெற்று, எம்.பி.ஏ. பட்டம் சூட்டிக் கொள்ள வேண்டியதுதான்'' என்றார் பிளேஸ்மெண்ட் சேர்மன் டாக்டர் ஒய். லக்ஷ்மண்குமார்.

“படிப்பு மட்டுமல்ல, குவிஸ், விளையாட்டு என எல்லாவற்றிலும் தூள் கிளப்பிக்கிட்டு இருக்கோம். 'எகனாமிக்ஸ் டைம்ஸ்' நடத்திய தமிழ்நாடு 'ஈடி க்விஸ்' அறிவுப் போட்டியில் இரண்டு வருஷம் தொடர்ச்சியா ஜெயிச்சருக்கோம். சி.என்.பி.ஸி. சானல் நடத்திய க்விஸ்ஸிலும் நாங்கதான் டாப் பர்ஸ்! சி.டி.எஸ். சுழற் கோப்பை வாங்கியிருக்கோம். எந்த மாதிரியான பிஸினஸ் கேம்ஸ் வைச்சாலும், 'ஃப்பூ'னு ஊதித் தள்ளிடுவோம்'' என்றார் மாணவர் சந்தீப்.

வாஷிங்டன் பல்கலைக் கழகம் 'தி குளோபல் சோஷியல் ஆன்த்ரப்ரானோவர்ஷிப் காம்படிஷன்'னு நடத்தறாங்க. அதுல உலகத்துல இருக்கிற எல்லா பல்கலைக் கழகங்களிலிருந்தும் நூற்று எழுபது குழுக்கள் கலந்து கொண்டன. ஆனால் இறுதிச் சுற்றுக்கு பதினாறு குழுக்கள் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன. அதுலே 'பிம்'மும் ஒன்று. விரைவில் எங்களோட 'ப்ரோ க்ரீன்' பிஸினெஸ் பிளானோட, வாஷிங்டன்லே இருக்கிற சியட்டல் நகருக்குப் போய் போட்டியிலே கலந்துக்கப் போறோம்'' என்கின்றனர் உற்சாகமாக... சந்தோஷ்... சரவணன், தீபக் பாட்டர், அனிதா பார்த்தசாரதி நால்வர் குழு!



* ஜெயிச்சாச்சு!

''வாஷிங்டன் போய், வெளுத்துக் கட்டிட்டு வாங்க!'' என்று 'பிம்' டீமை வாழ்த்தி விட்டு, பெருமை பொங்கத் திரும்பினோம்.

**- வினோத்**

# கிட்டப்பா பிளேட்டு

கிட்டப்பாவின் சாரீர மேன்மையைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. மேல் ஸ்தாயியில் அநாயாஸமாக சஞ்சரிக்கும் சக்தியுடையது; பனிக் காலத்தில் காலை வேளையில் பவள மல்லிகைச் செடியிலிருந்து பனித் துளிகளும் புஷ்பங்களும் கலகலவென்று உதிர்வது போல், சங்கதிகளை உதிர்க்கும் இயல்பு வாய்ந்தது; கேட்போர் செவியையும் உள்ளத்தையும் ஒருங்கே பரவசப்படுத்தும் மோஹன சக்தி பொருந்தியது. அந்த சாரீரம் இசைத் தட்டுக்கு எடுத்ததாயும் அமைந்தது இன்னும் விசேஷமாகும்.

கிட்டப்பா சிட்சைப் பட்டவரல்ல; அதாவது குருவினிடம் முறையாகப் பாடம் படித்து சங்கீதம் பயின்றவரல்ல. பூர்வ ஜன்ம சுகிர்தத்தினால் - இசைவாணியின் அருள் விலாஸத்தினால் - சங்கீதம் தானே தேடி வந்து அவரை அடைந்தது. ஆகவே சாதாரண வித்வான்கள் போகத் துணியாத இடங்களுக்கெல்லாம் அவர் அநாயாஸமாகப் போவார். வித்வான்கள் பிரமித்து நிற்பார்கள்; "அம்மம்மா! இது நம்மாலாகாது!" என்பார்கள். "இது சம்பிரதாயத்துக்கு விரோதம்; அது யாரும் போகாத புது வழி; இங்கே எல்லை கடந்து போய் விட்டார்" என்றெல்லாம் பண்டிதர்கள் முணு முணுக்கவும் செய்வார்கள். ஆனால் இலக்கியத் துறையில் வரகவிகள் செய்யும் 'பிழை'களே பிற்காலத்தில் 'இலக்கண'மாகி விடுகின்றன. சங்கீதத்திலும், எத்தனையோ, விவாதத்துக்கிடமான பிரச்னைகளைப் பெரியோர்களின் 'பிரயோக'ங்களைக் கொண்டுதானே முடிவு கட்டுகிறார்கள்? ஸ்ரீமான் கிட்டப்பா சங்கீதத் துறையிலேயே தனித்து ஈடுபட்டிருந்தால் அவருடைய 'பிரயோக'ங்களே பிற்காலத்தில் எடுத்துக்காட்டுகளாக ஆகியிருக்கும். இப்போது அவருடைய துணிச்சலைக் கண்டு மூக்கில் விரல் வைத்து ஆச்சரியப்படுவதுடன் நிற்கிறோம்.



இதையெல்லாம் விட முக்கியமாக, ஸ்ரீமான் கிட்டப்பா சங்கீதத்தின் ஜீவன் எது என்பதை இயற்கையறிவால் உணர்ந்தவர் என்பதைக் குறிப்பிட வேண்டும். அவர் பாட்டிலெல்லாம், ஸாஹித்யத்தின் வார்த்தைகளுடன் இசை கலந்திருப்பதைக் காணலாம்.

"கோடையிலே இளைப் பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர் தருவே"

என்ற அருட்பாவை அவர்

**அமரர் கல்கி**

இசைத் தட்டில் பாடியிருப்பதைக் கேளுங்கள். பாவின் சொற்களும் இசையும் எப்படி ஒன்றுடன் ஒன்று



• கிட்டப்பா

கலந்து வருகின்றன? சொற்களை அப்படியே அந்தரத்தில் தொங்க விட்டு விட்டு, ராக விஸ்தா ரத்தில் புகுந்து விடுகிறாரா, பாருங்கள்! கிடையாது. அங்கங்கே முக்கியமான சொற்களில் நின்று இசையமுதத்தைக் கலந்து பொழிகிறார். "கனியே!" "பூங் காற்றே!" ''மணவாளா!'' முதலிய சொற்களில் சொல்லின்பமும், பொருளின்பமும், இசையின்பமும் ரஸபாவத்துடன் கலந்து பெருகுகின்றன.

(சங்கீதத்தின் இந்த முக்கியாம்சத்தை நன்கு தெரிந்து கொள்வதற்கு, இந்த அம்சம் சிறிதேனும் இல்லாத இன்னொரு இசைத் தட்டை உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம். ஒரு பெரிய வித்வான் - சாரீர சம்பத்தில் இணையற்றவர் - கொடுத்திருக்கும் "ஒருமையொடு" என்ற பிளேட்டைக் கேளுங்கள். ஒரே மூச்சில் மளமளவென்று வார்த்தைகளைக் கொட்டி 'டும்' என்று நிறுத்திவிட்டு, ராக விஸ்தாரத்தில் புகுந்து விடுகிறார். ''பொய்மை பேசாதிருக்க வேண்டும்" என்பதில், "பொய்..." என்று நிறுத்தி ஒரு பிர்கா அடிக்கிறார். இன்னும், ''பொய்மை பேசாதிருக்க வேண்டும்", ''மருவு பெண்ணாசையை மறக்க வேண்டும்" என்ற வாக்கியங்களில், இசையின் பாவம், "ஐயோ! பொய் பேசாமல் இருக்க வேண்டியிருக்கிறதே!" "அடாடா! மருவு பெண்ணாசையை அநியாயமாய் மறக்க வேண்டியிருக்கிறதே!'' என்று துயரப்படுவது போலிருக்கிறது.)

விருத்தங்கள் பாடும்போது, சொற்களையும் ராகத்தையும் இசைத்துப் பாடினால், பாலில் சர்க்கரையைக் கலந்து சாப்பிடும் ருசி ஏற்படுகிறது. வார்த்தைகளை மடமடவென்று ஒப்பித்து விட்டு, ராக விஸ்தாரத்திற்குப் போதல், சர்க்கரையை முதலில் தின்று விட்டு, அப்புறம் பால் குடிப்பது போல்தான். இன்னும் பார்க்கப் போனால், முதலில் சர்க்கரையைத் தின்று விட்டு அப்புறம் சர்க்கரை போடாத காப்பி குடிப்பது போல் என்றும் சொல்லலாம்!

**- 'கல்கி களஞ்சியம்' கட்டுரைத் தொகுப்பிலிருந்து வானதி பதிப்பகம்**

**வா**யைப் பொத்திய வினோதினியின் கையை விலக்கினான் கார்த்திகேயன்.

"இன்னொரு தடவை அந்த வார்த்தையை நான் கேட்கக் கூடாது உங்க கிட்டேருந்து..." தோளில் பதிந்த அவன் கை நடுங்குவது தெரிந்தது கார்த்திகேயனுக்கு.

"உங்க பாட்டு உங்களுக்குச் சொந்தம்னு நினைச்சது போதும் கார்த்தி... அது உங்களோடதோ நம்மளோடதோ இல்ல... உலகம் கேட்கத் தயாராயிருக்கற வரைக்கும் நீங்க பாடணும்..."

இழுத்து பெருமூச்சு விட்டான் கார்த்திகேயன். குயில்கள் மீண்டும் கூவ ஆரம்பித்தன...

# குயில் தோட்டம்

"நீ சொல்றது புரியாம இல்லை வினோதினி... ஆனா உலகத்தோட எதிர்பார்ப்புக்காக நான் பாடிண்டே இருக்க முடியுமா..? எனக்கு நிறுத்தணும்னு தோணறது..."

''ஐயோ! அப்படிச் சொல்ல வேண்டாம்... எதுக்காக நிறுத்தணும்..?"

''பொறுமையா கேட்கணும் நான் சொல்றதை.. சரியா...?"

"சரி..."

"ஓரே ஒரு ஊர்ல கார்த்திகேயன்னு ஒரு பையன் இருந்தான்..."

"இது என்ன விளையாட்டு கார்த்தி... சீக்கிரம் விஷயத்தைச் சொல்லுங்கோ..."

''பொறுமையா



ரொம்ப நொந்துக்க வேண்டாம், ப்ளீஸ்!

இனிமே நோகாது. குரல் ஒரு கருவி தான்னு நன்னாவே புரிஞ்சுபோச்சு.

கேட்கணும்னு முதல்லயே சொன்னேன் இல்லே..."

வினோதினி மௌனம் காத்தாள்.

கார்த்திகேயன் தான் கும்பகோணத்தில் பிறந்த கதை தொடங்கி, அங்கே பள்ளியில் படிக்கும்போதே உள்ளூர் வெங்கடராம பாகவதரிடம் பாடக் கற்றதையும், அரசு ஸ்காலர்ஷிப் பெற்று சென்னையில் மகாவித்வான் ராஜகோபால சாஸ்திரியிடம் மாணவனாகச் சேர்ந்ததையும் நினைவுகூர்ந்தான். அவனது படிப்புக்காக அம்மா மட்டும் சென்னைக்கு வந்து குடித்தனம் போட்டு பார்த்துக் கொண்டதைச் சொன்னான். பதினாலரை வயதில் முதல் முழு நேரக் கச்சேரி பாடிய தேதியைச் சொன்னான். வர்ணம் முதல் மங்களம் வரை அன்று பாடியவற்றைக் கூட மறக்காமல் பட்டியலிட்டான்.

"அப்புறம் காலேஜ் டேஸ்ல - வினோதினின்ற அழகான பொண்ணைச் சந்திச்சான்..."

"ம்ஹூம்...?" என்றாள் வினோதினி...

"நெருங்கிப் பழகி காதலிக்க ஆரம்பிச்சா இரண்டு பேரும்... ஆனா அவ அவனை நேசிச்ச அளவுக்கு அவனால அவளை நேசிக்க முடியலை..."

வினோதினி மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டாள். வெளியே குயில்கள் ஓய்ந்திருந்தன. ஜன்னல் வழியே விழுந்த நிலவொளி, திடீரென்று மறைந்து விட்டிருந்தது. வான் நிலவைக் கருமேகங்கள் திரையிட்டிருந்தன.

"ஏன்...?" மிக மெதுவாக அவள் கேட்டது

சீதா ரவி



அவன் காதில் விழுந்திருக்கவே முடியாது.

அவன் முகவாயைக் கைகளில் ஏந்திய படி சொன்னான்: "ஏன்னா... அப்போ கார்த்திகேயனுக்கு ஏற்கெனவே ஒரு காதலி இருந்தா... அவன் கூப்பிட்ட குரலுக்கு ஓடி ஓடி வந்தவ... வாயு வேகம் மனோ வேகம்னு சரித்திரக் கதையில வர்ற வர்ணனை மாதிரி, கார்த்திகேயன் நினைக்கற நேரத்துல, நினைக்கிற இடத்துல ஓடி ஓடி வந்து அவ காத்திருப்பா. அவனுடைய அத்தனை வேட்கைக்கும் சலிக்காம பணிஞ்சு ஈடு கொடுப்பா.

கண்ணாடியில முகம் பார்த்தா, கூடவே வந்து நிற்பா. தலையணையில தலை சாய்க்கப் போனா, தயாரா மடியில ஏந்திக்குவா. நீ நம்ப மாட்டே வினோதினி... கார்த்திகேயன் அவ தனக்கு அடிமைன்னு தீர்மானமான ஒரு நிலைக்கு வந்தான் பாரு... அதே க்ஷணத்துல அவனை அறியாமலே அவளுக்கு அடிமையானான்..."

மீண்டும் நிலா வெளிச்சம் வெளிவர ஆரம்பித்தது. வினோதினியின் கண்ணோரத்தில் திரண்ட நீரில், அந்த வெளிச்சம் பட்டு ஒளியூட்டியது. மெள்ள அந்த நீர்த்துளிகள் உருண்டு கன்னத்தின் வழியே இறங்கி கார்த்திகேயனின் கைகளை ஈரமாக்கின.

"இதுக்கப்புறம் இந்தக் கதையை நான் சொல்லட்டுமா கார்த்தி...?"

"சொல்லு..." - அவள் ஈர விழிகளில் முத்தமிட்டான்.

"ராஜகோபால சாஸ்திரி அகாலமா போய்ச் சேர்ந்துட்டதால கார்த்திகேயனை நெறிப்படுத்த யாரும் இல்லே. டிகிரி முடிச்சுட்டு முழு நேர மியூசிஷியன் ஆயிட்டார். இரண்டு வருஷத்துல அப்பா அம்மாவும் அடுத்தடுத்து காலமாயிட்டா. அப்போ கார்த்திகேயன் மாசத்துக்கு இருபது கச்சேரி பண்ற அளவுக்கு வளர்ந்துட்டார். கேட்ட ரேட் கிடைச்சது. 'கல்யாணம் பண்ணிக்கோ'ன்னு மாமா மஹாதேவன் சொன்னப்போ, வினோதினி ஞாபகம் வந்து தேடி வந்தார். அவ குடும்பம் விதிர்விதிர்த்துப் போய், அவளைக் கார்த்திகேயனுக்குத் தூக்கிக் கொடுத்துடுத்து..."

"ஓஹோ! அப்படின்னா வினோதினிக்கு இஷ்டம், சம்மதம் எதுவுமில்லியா....?" கார்த்திகேயன் இடைமறித்தான்.

"குறுக்கே பேசக்கூடாது! வினோதினிக்கு என்னிக்கோ சம்மதம்ன்றதால பிரச்னையே எழலை. கார்த்திகேயனோட மகிழ்ச்சியா குடும்பம் நடத்த ஆரம்பிச்சா. அவனோட ரகசியக் காதல் பத்தி அவளுக்குச் சந்தேகமே எழலை. உருவமில்லாத அந்தக் காதலி அவா இரண்டு பேர் வாழ்க்கைலயும் விரவிப்போனா... நந்தினின்னு ஒரு பொண்ணு. கல்யாண

> **''டைரக்டர் இந்த அளவுக்கு பொறாமை புடிச்சவரா இருப்பார்னு நான் எதிர்பார்க்கவேயில்லை...''**
>
> **''அப்படி என்ன சொல்லிட்டாரு?''**
>
> **''ஒவ்வொரு காட்சியிலும் புது ஹீரோ முத்திரை பதிச்சு நடிச்சிருக்கார்னு நாம விமர்சனம் எழுதினதுக்கு, 'ஆமா, தபால் ஆபீஸ் வாசல்லதான் அவனைக் கண்டு பிடிச்சேன்'னு கடிதம் எழுதியிருக்கார்!''**
>
> **- செந்தில் முருகன்**

மாகி ஒன்றரை வருஷம் கழிச்சுப் பிறந்தா. கார்த்திகேயனோட கீர்த்தி மேல மேல போச்சு..."

உயர்த்திக் காட்டி அபிநயித்த அவள் கையைப் பற்றிக் கொண்டான் கார்த்திகேயன். "அப்புறம் விபத்து மாதிரி நடந்த விஷயம்தான் நமக்குத் தெரியுமே. கார்த்திகேயனோட காதலி அவனுக்குள்ளேயேயிருந்துண்டு அவனைப் பழிச்சுக்காட்டினா. பாட முடியாம அவன் குரல் சிதிலமாச்சு. அதே நேரத்துல, கார்த்திகேயனோட மாயக் காதல் பொடிப் பொடியா உதிர்ந்துபோச்சு... அதை அவனால தாங்கிக்கவே முடியலை. பாடலைன்னா வேற பிழைப்பைத் தேடிக்கலாம்ன்ற தர்க்க வாதமோ, தன்னையே வெறித்தனமா நேசிச்சுக் கறதுல இருக்கற அபத்தமோ, அவனுக்குப் புரியவே இல்லை.."

"போதும் கார்த்தி... இப்போ ஏன் பழசெல்லாம். எல்லாம் நன்னா ஆகிஸ்திரமா இருக்கறப்போ, அது வேண்டாம்..."

"இல்லை வினோதினி. நடந்தது கசப்பானதுன்னாலும், விளைஞ்சது நாமே எதிர்பார்க்காதவொரு நல்ல நிலைமை."

"நான் எதிர்பார்த்தேன். திரும்பவும் சரியாகும்னு எனக்குத் தெரியும்."

"நீ என் பேர்ல வைச்சிருக்கற அந்த நம்பிக்கைதான் எல்லாத்தையும் சரியாக்கியிருக்கு வினோதினி. என் முயற்சி, யோகப் பயிற்சி எதுவுமே அந்த நம்பிக்கை இல்லாம பயனளிச்சிருக்காது. இப்போ, இந்த நிலைமைல பூமியில கால் பதிஞ்சு




நான் நிற்கறப்போ, நடந்தது எதையும் மறக்க விரும்பலை. அப்படியொரு கார்த்திகேயன் இருந்தான்றதே எனக்கு எப்பவும் எச்சரிக்கையா இருக்கு..."

"ரொம்ப நொந்துக்க வேண்டாம், ப்ளீஸ்!"

"இனிமே நோகாது. குரல் ஒரு கருவி தான்னு நன்னாவே புரிஞ்சுபோச்சு. நிலையானது சங்கீதம்தான். அதை ஆள்றதுக்கும், ஜெயிக்கறதுக்கும் ஆன ஆயுதமில்லே குரல். முடிஞ்சா அதுக்கு வந்தனம் பண்ண, அந்தக் கருவியைப் பயன்படுத்தணும். இல்லையானா பேசாம இருக்கணும்... நான் இனிமே பேசாம இருக்கறதுக்குத்தான் விரும்பறேன்..." மூச்சிரைத்தது அவனுக்கு. வினோதினி அவன் முதுகில் தடவிச் சொன்னாள்: "இன்னிக்குச் சாயங்காலம்... இல்லல்லை, இப்போ மணி விடிகாலம் நாலாயிடுத்து... நேத்திக்கு சாயங்காலம் பாடினேளே கச்சேரி... அது வந்தனமாத் தோணலையா உங்களுக்கு...? ஊர் உலகத்துக்கு வேணா அதே கார்த்திகேயன், அதே பழைய குரல்னு தோணலாம். ஆனா நமக்குத் தெரியும். இது புது மனுஷன்; புதுப் பாட்டு... அப்போ ஏன் நிறுத்தணும்...? இதே மாதிரி தொடர்ந்து பாடலாமில்லையா...?"

"எப்படிப் புரிய வைக்கறதுன்னு தெரியலே. இன்னிக்குப் பாடினதுல எனக்குக் கிடைச்ச அனுபவம் உசத்தி, ரொம்ப உசத்தி. இன்னொரு தடவை முயற்சி பண்ணி இதுல இம்மியும் குறைச்சலா கிடைச்சா, அதை மனசு ஏத்துக்காது..."

"ஹா! எத்தனை சுயநலம் உங்களுக்கு...? உங்க அனுபவம் அப்படியே உங்களைக் கட்டிக் காக்கணும் இல்லியா?... மத்தவங்களைப் பத்தி உங்களுக்குக் கவலை இல்லை. நேத்தி கச்சேரியை ஒரு அறுநூறு பேர் கேட்டிருப்பா. இன்னும் உலகத்துல எத்தனை பேர் பாக்கியிருக்கா... அவாளுக்கெல்லாம் இந்த மேன்மைல பங்கு வேண்டாமா...? நீங்களே எல்லாத்தையும் பூட்டி வைச்சுக்கறதா..?"

"நான் பூட்டி வைச்சுக்கப் போறதில்லே.. ஒரு இசைப்பள்ளி ஆரம்பிக்கலாம். 'குயில் தோட்டம்' - இந்த வீட்டுலயே... அடிப்படை சுத்துத் தர்றதுக்கு, நூறு பேரை நியமிக்கலாம். கச்சேரி பண்ணக்கூடிய திறமை இருக்கற குழந்தைகளுக்கு நானே பயிற்சி தரேன்..."

"செய்யுங்கோ. நானும் கூட இருக்கேன். ஆனா, அதுக்காக கச்சேரிகளை நிறுத்த வேண்டாம். மேடையும் புகழும் போதைன்னு பயமா..?"

"என்னைவிட உனக்கு என்னைத் தெரிஞ்சுருக்கே!"

"அப்போ எதுக்கு பயம்? நான் இருக்கேன். மேன்மையான அனுபவம்னு நேத்தி கச்சேரியைச் சொன்னேள். மேன்மைக்கு உச்சம் கிடையாது கார்த்தி. அப்படி ஒண்ணு இருந்தா, உலகத்துல திரும்பத் திரும்ப கலையும் கலைஞர்களும் தோன்றி வளர்ந்துண்டே இருப்பாளா...? தத்துவத்தை விட்டுடுவோம். நேத்தி பாடினதைவிடச் சிறப்பா, இன்னொரு கச்சேரி அமையாதுன்னு என்ன நிச்சயம்....?"

கார்த்திகேயனிடமிருந்து பதில் இல்லை.

"மறுக்கக் கூடாது. நாளைக்கு அமெரிக்காவிலேருந்து திரும்பவும் ஃபோன் வரும். டூர் ப்ரோக்ராம் ஒப்புக்கச் சொல்லி அழைப்பு வரும். எல்லாத்துக்கும் பதில், திட்டங்கள் மனசளவுல தயார் பண்ணிக்கணும். நீங்க தொடர்ந்து எல்லா மேடையும் பாடணும். இந்த அளவுக்கு மகிழ்ச்சியை மட்டுமே தரக் கூடிய கலையோ, தொழிலோ வேற கிடையாது..."

## கடுப்பு கிளப்புது கரன்ஸி!

**லொள்ளு யாதவ்வின் நோட்டு சர்ச்சை தெரிந்த கதைதானே! தேர்தல் கமிஷனரிடம் அவர் என்னென்ன விதமாக விளக்கம் கூறி இருப்பார்? இதோ சில கற்பனைகள் :**

"என் கட்சிக்காரர்கள் ஆரத்தி எடுத்தார்கள் கும்பலாக! அனைவருக்கும் பணம் கொடுத்தேன்! இது தப்பா?"

"நல்ல நோட்டா? கள்ள நோட்டா? பார்த்துச் சொல்லுங்க... பி.ஜே.பிக்காரங்க கொடுத்ததுன்னு ஜனங்க கேட்டுக் கொண்டார்கள். சரிபார்த்து, திருப்பித் தருவதை மட்டும் படம் பிடித்து விட்டார்கள். சதி! சதி!"



"ஆயிரம் ரூபாய் நோட்டுக்கு சில்லறை கேட்டார்கள். சில்லறையாக பத்தே பத்து நூறு ரூபாய் நோட்டுகள் எண்ணிக் கொடுத்தேன்! தப்பா?"

"ஓசியில் ரயிலில் பேரணிக்கு வரக் கூடாது. டிக்கட் வாங்கித்தான் வர வேண்டும் என்று கண்டிப்பு செய்து, டிக்கட் வாங்கப் பணம் கொடுத்தேன். என் நேர்மையைக் கொச்சைப் படுத்தலாமா?"

- ச.இராசன், சென்னை

படுக்கையறைக் கதவை ஓங்கித் தட்டும் ஓசை கேட்டது. வினோதினி எழுந்து போய்த் திறந்தாள்.

"கதவை ஏன் தாப்பாப் போட்டே....? சிக்ஸ் தர்டி ஆகறது... இன்னும் எழுந்திருக்கலை இரண்டு பேரும்.." நந்தினி தூக்கம் விழித்து, கதவருகே நின்று அதிகாரம் பேசினாள்.

"அப்பாவும் நானும் ரொம்ப நேரம் பேசினோமா... அதான் உனக்குத் தொந்தரவாயிருக்கக் கூடாதுன்னு கதவைச் சாத்திட்டோம்" வினோதினி சமாளித்தாள்.

"எனக்கொரு கனவு வந்தது..."

"என்ன கனவு?" கார்த்திகேயன் கேட்டான்.

"நீ கச்சேரி பாடற மாதிரிதான்... எப்படித் தெரியுமா...? இங்க வா காட்டறேன் அவன் கையைப் பிடித்துத் தரதர வென்று ஹாலுக்கு இழுத்துக் கொண்டு போனாள் குழந்தை.

"ம்! உட்காருங்க இரண்டு பேரும்."

தரையில் இருவரும் அமர, அவர்கள் எதிரே சோஃபாவில் ஏறி சம்மணமிட்டு உட்கார்ந்து நந்தினி பாடினாள்.

"ஏதாவுன்னரா... நிலகடவு..."

கார்த்திகேயனைப் போலவே, கையை உயரத் தூக்கி அசைத்து சைகைகளுடன் பாடினாள்.

"இப்படிப் பாடறா அப்பா... நிறையக் கூட்டம். எல்லாரும் கை தட்டறப்போ நானும் கை தட்டினேன். அப்புறம் கனவு முடிஞ்சு போச்சு."

கார்த்திகேயன் குழந்தையை வாரி மடியில் வைத்துக் கொண்டு சொன்னான்.

"அடுத்த கச்சேரியில நிஜமாவே இந்தப் பாட்டைப் பாடிட்டாப் போச்சு."

வினோதினி இருவரையும் சேர்த்து இறுக, மிக இறுக அணைத்துக் கொண்டாள்.

(முற்றும்)

# நடக்குமென்பார்; நடக்கும்!



துலாம் ராசிக்காரரான தேவி ப்ரியாவுக்கு நிம்மதியான வாரம்!

**மேஷம்:** புது வருஷம் பொறக்கும்போதே இனிப்பான செய்தி, நீங்க எதிர்பார்த்துக் காத்திட்டிருந்த செய்தி வந்து சேரும். முயற்சிங்கறது இல்லாம மகிழ்ச்சிங்கறது ஏதுங்க? நடுவில கொஞ்சம் அலைச்சல், பிரச்னைன்னு வந்தாலும் வாரக் கடைசிக்குள்ள சரியாயிடும், கவலைப் படாதீங்க. தெய்வீக ஈடுபாடும், அக்கறையுள்ள பெரியவங்க துணையும் வழிகாட்டும். ஆபீஸ்ல எல்லாரும் ஆதரவா இருப்பாங்க. தொழில், வியாபாரத்தில அபிவிருத்தி ஏற்படும். வெளிநாட்டிலேருந்து சாதகமான செய்தி வரும். குடும்பத்தில உடன்பிறந்தவங்களை அனுசரிச்சா ஒற்றுமையும், மகிழ்ச்சியும் கிடைக்கும். பெண்களுக்கு ஆடை, ஆபரணச் சேர்க்கை மகிழ்ச்சி தரும்.

**ரிஷபம்:** நீங்க எதைச் சொன்னாலும், செய்தாலும் சரியாத்தான் இருக்கும் கற நம்பிக்கை எல்லாருக்கும். அதனால எல்லாப் பக்கமும் ஆதரவு கூடிடும். அரசாங்க விஷயங்கள் எல்லாம் அனுகூலமாகும். பண நடமாட்டம் தாராளமோ தாராளம். அப்புறமென்னங்க, ஜமாயுங்க. ஆபீஸ்லேயும் எல்லாரும் உங்களுக்கு ஆமாஞ்சாமிதான். வெளியூர்/வெளிநாடு போகிற சான்ஸ் கிடைக்கும். தொழில், வியாபாரத்தில் பழைய பாக்கியெல்லாம் வந்து சேர்ந்துடும். புதுசா ஏதாவது ஆரம்பிக்கற ஐடியா இருந்தா, தைரியமா ஆரம்பிக்கலாம். குடும்பத்தில சுபகாரியம் ஈடேறும். பெண்களுக்கு உடன்பிறந்தவர்களால் நன்மை கிடைக்கும்.

**மிதுனம்:** உங்க துணிவும், தன்னம்பிக்கையும்தாங்க மூலதனம், ஆயுதம், பலம், எல்லாம். எதிர்ப்புகள் அடக்கி வாசிக்கும். தயங்காம முன்னேறுங்க. ஆபீஸ்ல அனுகூலமான நேரம். புதிய முயற்சிகள் ஏதும் இருந்தா ஆரம்பிச்சுடுங்க. தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்களுக்கு எதிர்பாராத திருப்பம் ஏற்படும். புதுத் தொழிலை மட்டும் கொஞ்சம் தள்ளிப் போடுங்க. குடும்பத்தில எதிர்பாராத செலவு சிலது காத்திருக்கு, உஷாரா, சிக்கனமா இருங்க. உடன்பிறந்தவர்கள் ஆதரவு தருவார்கள். பெண்களுக்குத் திட்டமிட்டபடி எல்லாம் நடந்து மகிழ்ச்சி கூடும்.

**கடகம்:** போனதெல்லாம் போகட்டும், விடுங்க. இனி எல்லாம் நல்லதேதான் நடக்கும், நம்புங்க. தாமதமாகி வந்தது,

ஜனவரி 5 முதல் 11 வரை

## அக்னிசர்மா பக்கம்

நடங்கலாகி நின்னது, தவிர்க்கமுடியாம விட்டது. எல்லாம் நல்லபடியா நடந்து உங்க மகிழ்ச்சியைக் கூட்டும். பொருளா தாரம் கொஞ்சம் உயரும். ஆபீஸ்ல இது வரை கவனிக்கப்படாத உங்க கோரிக்கை நிறைவேறும். தொழில், வியாபாரத்தில எதிர்பார்த்த உதவிகள் கிடைக்கும். ஏற்றுமதி - இறக்குமதி தொழில்ல எதிர் பாராத லாபம் கிட்டும். குடும்பத்தில கருத்து வேறுபாடு மறைஞ்சு ஒற்றுமையும் மகிழ்ச்சியும் கூடும். சுப காரிய முயற்சிகள் அனுகூலமாகும். பெண்களுக்கு மக்களால் மகிழ்ச்சி ஏற்படும்.

**சிம்மம்:** தெய்வத்தோட அருளால உங்க ராசிப்பேர் மாதிரியே சிங்கமாயிடு வீங்க. எதிரிங்க ஓடி ஒளிஞ்சு மறைஞ்சுடு வாங்க. எல்லா விவகாரங்களும் அனுகூல மாகி உங்களைத் தேடி வந்து நிற்கும். விஐபிங்க ஆதரவு உங்க பக்கம்தான். உத்தியோகத்தில உயர்பதவி காத்திருக்கு. தொழில், வியாபாரம், கூட்டுத் தொழில்னு இருக்கிறவங்களுக்கு எதிர்பார்த்த உதவி வந்து சேரும். வெளிநாட்டுத் தொடர்பு ஆதாயம் தரும். குடும்பத்தில கல்யாணம், பிள்ளைப் பேறுன்னு காத்திருக்கிறவங் களுக்கு நல்ல நேரம் கூடி வந்துடும். பெண்களுக்கு மகிழ்ச்சியான வாரம்.

**கன்னி:** மத்தவங்க மலைச்சுப் போய் நிக்கிற வேலையெல்லாம், நீங்க சிரிச்சிக் கிட்டே செய்து முடிப்பீங்க. உங்க திற மைக்குப் பாராட்டும், உங்க மதிப்பும் கூடுற நேரம்க இது. புது அறிமுகங்கள் சிலது கிடைக்கும். அதனால நன்மையும் சேரும். ஆபீஸ்லயும் உங்க திறமையால முக்கியமானவரா ஆயிடுவீங்க. தொழில், வியாபாரத்தில கொடுக்கல், வாங்கல் கை கொடுக்கும். குடும்பத்தில இதுவரை இருந்த நெருக்கடி மறைஞ்சு மகிழ்ச்சி கூடும். பெண்களுக்கு எண்ணம்போல எல் லாம் நடக்கறதும், வெளிநாட்டுக்குப் போன மக்கள் திரும்பி வர்றதும் மகிழ்ச் சியைக் கூட்டும்.

**துலாம்:** தெய்வ பலத்தைக் கூட்டிக் கிறது ஒண்ணுதான். நீங்க செய்ய வேண் டியது. எல்லோர் ஆதரவும், புதியவர்கள் அறிமுகமும் நன்மை செய்யும். எடுத்த காரியங்களெல்லாம் வெற்றிதான். தேவைக்கேற்ற பண உதவி கிடைக்கும். ஆபீஸ்ல இதுவரை இருந்த பிரச்னைகள் விலகி ஆதரவு கூடும். பதவி உயர்வு, இட மாற்றம் சிலருக்குக் கிடைக்கலாம். தொழில், வியாபாரமெல்லாம் சுமுகமா நடக்கும். குடும்பத்தில நெருக்கடி தீர தக்க சமயத்தில் உதவி கிட்டும். ஒற்றுமை கூடும். பெண்களுக்கு நிம்மதியான வாரம். அனுகூலமான திருப்பங்கள் சில நேரிடும்.

**விருச்சிகம்:** திறமையிருந்தாலும் சிலருக்குப் பெயர், புகழ் இருக்காது. அதிர்ஷ்டம்னு ஒண்ணு சேர்ந்தாத்தான் எல்லாமே கவனிக்கப்படும். அதிர்ஷ்டம் உங்களைத் தேடி வர்ற நேரம் இது. உங்க மதிப்பு, அந்தஸ்து, புகழ் எல்லாமே கூடி டும். தயக்கத்தை மட்டும் உதறிட்டு தைரி யமா எதிர்கொண்டா, நீங்க எங்கேயும்



பரிகாரம்: எல்லாருக்கும் எல்லாம் விழுந்தடித்துக் கொண்டு செய்துவிட்டு, பேசத் தெரியாமல் கெட்ட பெயர் வாங்கிக் கொள்பவர்கள் நம்மில் ஏராளம். சிலர் துரும்பைக்கூட அசைக்காமல் வெறும் வாய் ஜாலத்தால் 'தங்கம், பிளாட்டினம்' என்று பட்டங்களை வாங்கிக் கொள்வார்கள். அதனாலதான் 'வாயுள்ள பிள்ளை பிழைக்கும்'னு சொன்னாங்க பெரியவங்க. வாக்கு வன்மையும், சமயோசித புத்தியும் வரமா அருள, "சொல்லின் செல்வனை' விட்டா வேற யார் இருக்காங்க? வாரம் ஒருமுறை சென்னை அசோக்பில்லர்கிட்ட இருக்கிற இந்த ஆஞ்சநேயனை வழிபட்டா போதும். பேச்சுத்திறமை தன்னால வந்துடும். நீங்களே சுயமா இங்கே அவரை நெருங்கி வழிபாடும் செய்யலாம். வந்து பாருங்க, வாக்கு வன்மையை வரமா வாங்கி, வாழ்க்கையில ஜெயிச்சுக் காட்டுங்க.

- வி

ஜெயிக்கலாம். உத்தியோகத்தில, அதிலேயேயும் நிர்வாகத் துறையில இருக்கிறவங்க கொடி கட்டிடலாம். தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்களை மகாலக்ஷ்மி ஸ்பெஷலா பார்க்கிறா. கடன் தொல்லை காணாமப் போயிடும். குடும்பத்தில கஷ்டங்கள் மறைஞ்சு நிம்மதியும், சந்தோஷமும் தலை தூக்கும்.

## இது நல்ல வாரம்

| கிழமை | தேதி | நட்சத்திரம் | திதி | மற்றவை |
|---|---|---|---|---|
| புதன் | ஜன.5 மார்க.21 | சுவாதி | தசமி | - |
| வியாழன் | ஜன.6 மார்க.22 | விசாகம் | ஏகாதசி | ஸர்வ ஏகாதசி |
| வெள்ளி | ஜன.7 மார்க.23 | அனுஷம் | துவாதசி | - |
| சனி | ஜன.8 மார்க.24 | கேட்டை | திரயோதசி | பிரதோஷம் |
| ஞாயிறு | ஜன.9 மார்க.25 | மூலம் | சதுர்த்தசி | - |
| திங்கள் | ஜன.10 மார்க.26 | பூராடம் | அமாவாசை | ஹனுமத் ஜயந்தி |
| செவ்வாய் | ஜன.11 மார்க.27 | உத்திராடம் | பிரதமை | கூடாரவல்லி |

**தனுசு:** எத்தைத் தின்னா பித்தம் தீரும்னு அலைஞ்சு திரிஞ்சிங்க இல்ல, அந்த நிலைமை இனிமே மாறிடும். கொஞ்சம் அப்படியிப்பிடின்னு தடங்கல் வந்தாலும், ஜெயிக்கப் போறது யாரு... நீங்க, கலக்கப் போறது யாரு... நீங்கதான். அதனால கவலையை விட்டுட்டு தைரியமா முன்னேறுங்க. ஆபீஸ்லயும் இதே கதைதான். தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்களுக்கு சாதகமான நேரம். குடும்பத்தில பிரிஞ்சவங்க ஒண்ணா சேருவாங்க. மகிழ்ச்சி பத்து மடங்கு கூடிடும். பெண்களுக்கு உறவினர் வருகை, விருந்துன்னு உற்சாக வாரம்.

**மகரம்:** நினைத்ததை நடத்தியே முடிப்பவருங்க நீங்க. ஆண்டவன் அருளும், அனுபவமுள்ளவங்க அருளும் உங்க பக்கம் நிக்கிறதால வெற்றியோ வெற்றி தாங்க. உங்க திறமைக்கான அங்கீகாரம் கிடைக்கிற நேரம், பொறுமையா இருங்க. ஆபீஸ்லயும் அனுகூலமான நேரம்தான். அமைதியா உங்க வேலையைப் பாருங்க. இதுவரைக்கும் வேலை தேடினவங்களுக்கும், புதிய வேலைக்கு மாறலாம்னு இருக்கிறவங்களுக்கும் வெற்றி கிடைக்கும். தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்களுக்கு அபிவிருத்தி ஏற்படும். குடும்பத்தில வசதிகள் கூடி மகிழ்ச்சி பெருகும். பெண்களுக்கு சிறப்பான வாரம்.

**கும்பம்:** புது வருஷம், புதுப் பாதைன்னு ஆரம்பிக்கிறவங்க பார்த்து அடியெடுத்து வைங்க. பொறுமை, நம்பிக்கை கூடி வெற்றியை எட்டுற நேரம். நிதானமா செயல்படுங்க. நடுவில வர்ற பிரச்னைகளைப் பார்த்து தயங்கி நிக்காதீங்க. தன்னால அதெல்லாம் சரியாயிடும். ஆபீஸ்ல இதுவரை இருந்த பிரச்னைகள் மறைஞ்சு, நிம்மதி கிடைக்கும். சுமுகமா எல்லார்கிட்டேயும் பழகுங்க. தொழில், வியாபாரத்தில வர வேண்டிய லாபம் நிதானிச்சுதான் வரும். அவசரப்படாதீங்க. குடும்பத்தில பண நிலைமை கொஞ்சம் ஏற்றத் தாழ்வா இருக்கும். பெண்கள் குடும்ப ஒற்றுமை, பிரார்த்தனைன்னு ஈடுபடுறது நல்லது.

**மீனம்:** தெய்வ பலமும், பெரியவங்க ஆசியும்தான் உங்களோட இப்போதைய தேவை. சகல காரியங்களிலேயும் நிதானமான முன்னேற்றம் கிடைக்கும். அரசாங்க விஷயங்கள் அனுகூலமாகும். ஆபீஸ்ல இதுவரை இருந்த சூழ்நிலை மாறிப் போய், உங்க பக்கம் அனுகூலமாகும். பதவி உயர்வு, இடமாற்றம் சிலருக்குக் கிடைக்கலாம். தொழில் வியாபாரம் வளர்ச்சி பெறும். குடும்பத்தில அமைதியான சூழ்நிலை நிலவும். பெண்களுக்கு உடன்பிறந்தவர், உறவினரால் அனுகூலமும், மகிழ்ச்சியும் கிடைக்கும். பிரிஞ்சவங்க ஒண்ணு சேருவாங்க.

அமோகமாய் விளைந்திருந்தன நெற்கதிர்கள். சில தாள்கள் நிற்க முடியாமல் மண்ணில் சாய்ந்து கிடந்தன. கொழைத்தாக்கல் நிறையவே இருந்தது.

தொரசாமி வயலைச்சுற்றிப் பார்த்துக் கொண்டே வந்தான், 'இன்னும் ஒரு வாரத்துக்குள் அறுவடையை ஆரம்பிக்கணும், இல்லேன்னா நெல் தாழிலிருந்து கீழே உதிர்ந்திடும், அப்புறம் கைக்குக் கிடைத்தது வாய்க்குக் கிடைக்காமல் போயிடும்'- என்று நினைத்துக் கொண்டே சின்ன அரணியைத் தாண்டினான்.

அரணி வரப்பின் மேல் ஒரு நாகப் பாம்பு, தவளையைப் பிடித்து விழுங்கிக் கொண்டிருந்தது. தொரசாமி அந்தப் பாம்பைப் பார்த்து விட்டான், அவனது கையில் வைத்திருந்த வீச்சு அருவாளால் தைரியமாய் பாம்பை வெட்டினான். அதிர்வு கண்டுவிட்ட பாம்போ கொஞ்சம் நகர்ந்து போக, அதன் வால் பகுதியில் வெட்டு விழுந்தது. விரல் நீளத்துக்கு வால் துண்டாகித் துடித்துக் கிடக்க, பாம்பு நெளிந்து ஓடி விட்டது!

# பழி

பரிவாதினி

தொரசாமிக்குள் பயம், மனது பட...பட...வென அடிக்க, அடி வயிற்றைக் கலக்கியது. இது நாள் வரைக்கும் அவன் பாம்பு அடித்து தப்பித்ததே இல்லை. ஆனால் இன்றைக்குத் தப்பி ஓடிவிட்டது.

அங்கும் இங்கும் ஓடிப்போய் பார்த்தான். 'ப்ச்', காணவில்லை.

'தொரசாமி, உன் ஆயுசு முடிஞ்சுதுடா. தப்பிச்சுப் போன பாம்பு பழிக்குப் பழி வாங்காமல் விடாது. உன்னைக் கடிக்காமல் விடாது. ஏன்டா...! அவசரப்பட்டு இப்படிப் பண்ணித் தொலைச்சே? எங் கண்ணுக்குத் தெரியாமல் எங்காவது போயிடுன்னு சாமியைக் கும்பிட்டிருக்கலாமில்லே. அது சாதாரணப் பாம்பு இல்லடா... நல்லபாம்பு! ரோஷம் ஜாஸ்தி. என்னைக்காவது ஒரு நாள் தீண்டாமல் விடாது!' எனச் சொன்னது அவனது மனம்.

அவனுக்குள் பயம் ஊறியது. கை, கால்களெல்லாம் நடுங்கின. என்ன செய்வதெனத் தெரியாமல், ஒவ்வொரு வரப்பையும் உற்று... உற்றுப்... பார்த்தவாறே ஊருக்குள் நடந்தான்.

டீக் கடைக்குப் போய், ஒரு

அது என்ன சீவண்டா?

நாகப்பாம்புதான்! பெரிசு!

மடக்கு சொல்லி விட்டு அங்கே கிடந்த பெஞ்சில் பித்துப் பிடித்தவன் போல, பொத்தென்று உட்கார்ந்தான். மனசெல்லாம் பாம்பின் நீண்ட கண்ணாடி உடம்பே நெளிந்து திரிந்தது.

"வாப்பா தொர, இன்னைக்கு வந்த நியூஸ் பாத்தியா? மறுபடியும் டீசல் பெட்ரோல் விலையை ஏத்திப்புட்டானுங்க! இனிமேல் நம்ம டி.வி.எஸ்ஸையெல்லாம் வித்துட்டு, நல்ல சைக்கிளாப் பார்த்து வாங்கிக்கிறது தேவலைன்னு தோணுது. இன்னும் போகப் போக ஒரு லிட்டர் பெட்ரோல், அம்பது ரூபா வந்திரும் போலிருக்கு..." என்று அங்கே அமர்ந்திருந்த பெரியவர் சோகமாகச் சொன்னார்.

சிலை போல், வாய் பேசாமல் உட்கார்ந்திருந்தான் தொரசாமி. பேப்பரைப்



பிடுங்கிக் கொண்டு ஒரு எழுத்து கூட மிச்சம் வைக்காமல் படிப்பவன், இப்படி இருப்பது கண்டு டீக்கடை முனுசாமியே அதிசயப்பட்டான்.

"தொர...! உனக்கு என்னாச்சுப்பா? பேய் பிடிச்சவன் போல் இருக்கியே, ஏதாவது பிரச்னையா? வயலுக்குப் போய்ட்டுத்தானே வர்றே...? உன்னைத் தான் தொர...!" என்று அந்தப் பெரியவர் உலுக்க...

"அதெல்லாம் எந்தப் பிரச்னையும் இல்லே..." - என்றான் மெல்லிய குரலில்.

"உன்னைப் பார்த்தால் அப்படித் தெரியலியே..." என்றான் டீ - கொண்டு வந்து அவனிடம் நீட்டிய முனுசாமி.

துருவித்... துருவி கேட்கவும், தான் பாம்பு அடித்ததையும், அது தப்பித்துப் போன கதையையும் சொன்னான்.

"அடச்சண்டாளனே...! என்னடா இப்படிப் பண்ணிட்டே. சௌரியம் பத்தலேன்னா அந்தக் கெரகத்த விட்டுத் தொலைச்சிருக்கலாமில்லே, ஆமா... அது என்ன சிவண்டா...?" - என்று பெரியவர் கேட்க,

"நாகப்பாம்புதான்! பெரிசு, அதோட பொடினிப் பக்கம் ராமம் இருந்ததைப் பார்த்தேன்..."

"நல்லப் பாம்பாக இருந்தால் பழிக்குப் பழி வாங்காத சாகாதேடா, சனியன்...!" என்றார் வருத்தமாகி.



"கறைபடிந்த அமைச்சர்களுக்கு சலுகையா?"

"ஆமாம்... அவங்களுக்கு இனிமேல் தனியாக 'வாஷிங் அலவன்ஸ்' என்று ஒரு தொகையும் வழங்கப்படுமாம்..."

– எஸ். மோகன்

"அவர் சொல்லுறது உண்மைதான் தொர! மத்தசாதிகளா இருந்தால் கண்டுக் காது. இது என்னைக்குமே ஆபத்துதான். ரொம்ப உஷாரா இருந்துக்கப்பா" என்று எச்சரித்தான் முனுசாமி.

"நடந்தது... நடந்துருச்சு. இனிமேல் என்ன பண்ணறது? - பெரிசு.. அதோட கண்ணுல படாமல் நான் எப்படி நடப்பேன்?" - கேட்டான்.

சற்று நேரம் மௌனமாக யோசனை செய்த பெரியவர், மடாரென இப்படிச் சொன்னார்.

"அதுக்கு ஒரே வழிதான் இருக்குப்பா!"

"என்ன வழி... என்ன வழி? சீக்கிரமாச் சொல்லு..."

"வர்ற அமாவாசைக்கு கூவாத சேவலைப் பிடிச்சிட்டுப் போய். புத்துக் கண்ணுல சாமியைக் கும்பிட்டு, நான் செய்தது தவறுதான், மன்னிச்சுக்கோன்னு சேவலை அறுத்துட்டு, ரத்தக்குறி காட்டிட்டு வந்திரு..."

"ஓ...! அப்படிப் பண்ணினால் பழி வாங்காதா...?"- கேட்டான்.

"ஒண்ணும் பண்ணாது..."- என்றார் பெரியவர்.

முனுசாமியும் "ஆமாம்..." போட்டான். தொரசாமிக்கு பயம்போய் புதுத் தெம்பு வந்து விட்டது. அந்தப் பெரியவருக்கும் சேர்த்து டீக்குக் காசு தந்துவிட்டு நிம்மதியாகக் கிளம்பினான்.

அமாவாசையன்று பாம்புப் புற்றுக்கு முன் சேவல் அறுத்து, ரத்தக் குறி காண்பித்துவிட்டு வந்து விட்டான்.

வயலில் அறுவடை நடந்தது.

ஒரு பெண் 'வீல்' என்று கத்தியவாறே "அந்த அரிக்குள்ளே பாம்பு போகுது..." என்றாள்.

அவள் சொன்னதைப் போலவே தாழிக்குள் சுருண்டு கிடந்தது பாம்பு. அதைப் பார்த்த தொரசாமி, "இது தாண்டா அன்னைக்கு எனக்கு கடுக்காய் கொடுத்துட்டுப் போயிருச்சு..." என்ற வாறே தடியால் அடித்தான்.

"உன் கதை முடிஞ்சது" என்றான் கேலியாகக் காலால் நகர்த்தியபடி.

இவன்தான் பழிவாங்கினானே தவிர, பாம்பு வாங்கவில்லை.

# சென்டிமெண்ட் செம்மல்கள்!

இசையமைப்பாளர் டி.இமான், எந்தப் புது வேலையையும் செவ்வாய், சனிக்கிழமைகளில் ஆரம்பிப்பது இல்லை.

நேவி ப்ளூ நிறத்தில், சாம்பல் நிற பார்டர் புடைவை ஒன்றை மிகவும் ராசியானதாகக் கருதும் நிர்மலா பெரியசாமி, முக்கிய மான தருணங்களில் விரும்பி அணிகிறார்.

தினமும் ஸ்ரீ சாயி பாபா படத்தில் கண் விழிப்பதை சென்டிமெண்டாக வைத்திருக்கிறார் நடிகர் சேத்தன்.

தன்னுடைய எல்லா ரிகார்டிங்குகளிலும் ஆரஞ்சு நிற செருப்பு அணிவதை ராசியாக நினைத்து கடைப்பிடிக்கிறார் மிர்ச்சி சுசித்ரா.

சிவாஜி வீட்டு வாசலில் உள்ள பிள்ளையாரைக் கும்பிட்டுவிட்டே ஷூட்டிங்குக்குக் கிளம்புவார் மனோரமா.

ஒவ்வொரு புத்தாண்டுக்கும் குருநாதர் பாரதிராஜாவிடம் ஆசி வாங்குகிறார் நெப்போலியன்.

ஆழ்வார்பேட்டை ஆஞ்சநேயருக்கு வடை மாலை சாற்றிவிட்டே எந்தக் காரியத்தையும் ஆரம்பிக்கிறார் சிம்பு.

ஹார்மோனியத்தைத் தொடுமுன் 'ஸ்ரீரமண மாலை' பாடுகிறார் இளையராஜா.

புது வருஷமும் அதுவுமாக மேல்மருவத்தூரில் இசைக் கச்சேரி நடத்துவதை நல்ல துவக்கமாக நினைக்கிறார் இசையமைப்பாளர் தேவா.

- முத்து

# உருவம் சொல்லும் உயர் தத்துவம்




-மதனலோசனி ஜனார்த்தனம்,
சென்னை - 30

## கோபாலசமுத்திரம் 108 விநாயகர்

ஒரே ஒரு விநாயகரே போதும் ஓர் ஊருக்கு, தானாக எல்லா நலனும் வந்துவிடும். 108 விநாயகர்கள் ஒரே இடத்தில் இருந்தால்! கேட்கணுமா என்ன... வேண்டிக் கொண்டது, வேண்ட மறந்த துன்னு எல்லா வளமும் நலமும் வந்து சேர்ந்திடுமே! திண்டுக்கல் நகரத்தோட மத்தியில் கோபால சமுத்திரம் குளக்கரையில் இருக்கிறது இந்த 108 விநாயகர் கோயில்.

எந்தக் குழப்பமான பிரச்னையாயிருந்தாலும் சரி, இங்கே வந்து

திருவுளச்சீட்டு போட்டுப் பார்த்து, என்ன பதில் கிடைச்சாலும், மனசார ஏத்துக்கிட்டு நன்மையடைஞ்சவங்க ஏராளம். சங்கடஹர சதுர்த்தியில் விநாயகருக்கு தயிர் அபிஷேகம் பண்ணி, குழந்தைப் பாக்கியம் பெற்றவர்கள் இன்னும் ஏராளம். இன்னும் பலர் இதுக்காக வந்து போயிட்டிருக்காங்க. விநாயகர் சதுர்த்தியில் இங்கே 16 அடி விஸ்வரூப விநாயகருக்கு பெண்கள் பால்குடம் எடுத்து அபிஷேகம் பண்ணறதும், திருவிளக்கேத்தறதும் ரொம்ப விசேஷம்.

நூறாண்டுகளுக்குமுன் பிரதிஷ்டை செய்யப்பட்ட இந்த விநாயகருக்கு, நாற்பது வருஷத்துக்கு முன்னாலதான் கோயில் அமைஞ்சுது. வேண்டிக்கிட்டவங்களுக்கு உடனேயே பலனளித்து பிரபலமான இவருக்கு, 1983ல் ராஜகோபுரத்தோட கோயில் உருவானது. போன வருஷம் 108 விநாயகர்களைப் பிரதிஷ்டை செய்து, கும்பாபிஷேகமும் ஆனது. கோயிலை எஸ்.மருதநாயகமும், டாக்டர் கிருஷ்ணமூர்த்தியும் நிர்வாகம் பண்ணுகிற நேர்த்தி, பராமரிப்புல மட்டுமில்லாம, விநாயகருக்கு அணிவிச்சிருக்கிற எழுபது பவுன் தங்கக் கலசத்திலேயும் தெரியும்.

வாங்க. ஒருமுறை வந்து உங்க குறையும், பிரச்னையும் தீர்ந்து



போகிற வேகத்தைப் பார்த்துட்டீங்கன்னா, அப்புறம் எதுன்னாலும் இங்கே ஓடி, நாடி வருவீங்க.

- எஸ்.ஜெயசந்திரன்,
திண்டுக்கல்



# வன்னியூர் வள்ளல்!

வன்னிமந்தாரை ஸ்ரீமகா கணபதி புராதன விநாயகர் கோயில், திருவாரூர் வன்னியூர் (காரையூர்) கிராமத்தில் உள்ளது.

வன்னி என்ற இளமங்கையும், மந்தாரன் என்ற வாலிபனும் மண முடித்து, குதூகலத்துடன் செல்லும் வழியில், அனவரதம் ஸ்ரீமகா கண பதியை முறைப்படி வழிபட்டு வரும் மகாகணபதியின் அடியவர், பிள்ளை யார் வடிவெடுத்த புருசுண்டி என்கிற முனிவர் வந்து கொண்டிருக்கிறார். இந்த மானிடர் விநாயகர் வேடம் பூண்டு வருவதாய் நினைத்து, இளம் பெண் புருசுண்டி முனிவரைக் கண்டு பயந்து ஓடுகிறாள். மந்தாரனோ புருசுண்டியை கேலி செய்து மிரட்டுகிறான். புருசுண்டி, விநாயகர் பெருமைகளையும், தாம் யார் என்பதையும் எடுத்துக் கூறியும் தம்பதி அவரைப் பொருட்படுத்தாது கேவலப் படுத்தவே, இளம் தம்பதிக்கு சாபம் இடுகிறார் முனிவர் புருசுண்டி.

முனிவர் புருசுண்டி சாபத்தால் பெண் வன்னி மரமாகவும், மந்தாரன் மந்தாரை மரமாகவும் மாறிவிட்டனர். உடனே சௌனக முனிவர், ஸ்ரீமகா கணபதியிடம் நடந்த சம்பவங்களை எடுத்துக் கூறி, இளம் தம்பதிகளை மன்னித்து விட மன்றாடுகிறார். ஸ்ரீமகா கணபதியோ தமது அடியாரை அவமானப்படுத்திய குற்றத்தை தான் மன்னிக்க விருப்பம் இல்லையெனவும், இருப்பினும் இந்தத் தம்பதியின் பெயர் உலகெங்கும் நிலைக்க வேண்டி, விநா யகர் தாம் வன்னிமந்தாரைக் காட்டில் வன்னியூர் என்கிற கிராமத்தில் சான் னித்யம் கொண்டிருப்பதுபோல வன்னி யூரில் (காரையூரில்) கோயில் கொள் வேன் எனவும், சௌனகரிடம் கூறு கிறார். பக்தர்கள் வன்னி இலையாலும், மந்தாரைப் புஷ்பத்தாலும் அர்ச் சனை செய்தால் கஷ்டங்களிலிருந்தும், பாபங்களிலிருந்தும் விடுவிப்பதுடன், கோரிக்கை யாவையும் நிறைவேற்றி வைப்பதாகவும், சௌனக முனிவரிடம் சத்யப்பிராமாணம் செய்து தருகிறார். அந்த சத்தியப் பிராமணப்படி வன்னி மந்தாரை ஸ்ரீமகாகணபதி இன் றும் வன்னியூரில் கோயில் கொண் டுள்ளார்.

- ஆர். கோபாலன்,
சென்னை

வலைபாயுதே

# பெண்களின் ஹேப்பி! ஆண்களின் பிபி!

அகிலா, சசிரேகா, ப்ரித்திகா, பீனா, ரீமா, அன்னபூர்ணா, ஆஷிமா, ஷில்பா, அங்கிதா, சாருலதா, அம்ரிதா... இதெல்லாம் புதுசா வந்திருக்கிற புடைவைகள் லிஸ்ட். வலையில ஒரு ஜவுளிக் கடையே நடத்துறாங்க chennaibazzar.com. அதுவும் புடைவை டிசைன் முதற்கொண்டு போட்டோவோட பளபளக்குது. சல்வார், ஜுவல்ஸ், குழந்தைகளுக்கான பொருள்கள், கிஃப்ட் ஐயிட்டம்ஸ் எல்லாம் கடை பரப்பியிருக்காங்க. ரொம்ப அப்டேட்டா, நீட்டா இருக்குது இத்தளம்.

(ஆனா பெண்களுக்கு ஹேப்பியையும், ஆண்களுக்கு பிபியையும் கூட்டுகிறது).



'ஈகோ'. பல பிரச்னைகளின் ஆரம்பம் இதுதான். அதுவும் முக்கியமாக கணவன் மனைவிக்கிடையில் 'ஈகோ' வந்துவிட்டால் மண வாழ்க்கையே காலி ஆகிவிடும். விவாகரத்து வாகை சூடிவிடும். விவாகரத்துக்கான காரணங்கள், தீர்வுகள், ஆலோசனைகள், சந்தேகங்கள் எல்லாவற்றையும் கொண்டுள்ள தளம் divorcesource.com. இது அமெரிக்கத்தளம். ஆனால் இந்திய விவகாரத்துச் சட்டங்கள் பற்றி மதவாரியாக விளக்கும் தளம் tribuneindia.com. இத்தளம் வாழ்க்கை சிறப்பாக வாழ டிப்ஸ்களும் தருகிறது.

(ஹலோ பிரம்மச்சாரீஸ்! இந்த தளங்களைப் பார்த்தப்புறம் கல்யாணத்தை பத்தி யோசிங்க!)

குட்டிப் பாப்பாவா இருந்து இப்ப நல்ல கொழு கொழுன்னு வளர்ந்திருக்கிற இந்திய ரயில்வேயின் பரிணாம வளர்ச்சியைக் காட்டும் தளம் railmuseum.org. இதுதான் இந்தியாவின் முதல் டிஜிட்டல் மியூஸியம். புது டில்லியிலுள்ள இம்மியூஸியத்தை சில பல கிளிக்குகளில் உங்கள் கண்ணுக்கே கொண்டு வரலாம். பாம்பே-தானே முதல் ரயில் பயணம், நிலக்கரி, நீராவி, டீசல், எலக்ட்ரிக், சூப்பர் ஃபாஸ்ட் ரயில்கள் என பல ஆட்டோகிராஃப்களை இத்தளம் கொண்டுள்ளது. ரயில்வே தேர்வுகள் எழுதும் மாணவர்களுக்கு உபயோகமான தளம் இது.

(அதுக்காக எக்ஸாம் கொஸ்டின் பேப்பர் கிடைக்குமான்னு கேட்கறதெல்லாம் ரொம்ப ஓவர்!)

- ப்ரெளஸர்.




# 24. அழகர் சித்தம்

**வை**கைக் கரையின் அந்த மாலைப் பொழுது மனத்தை மயக்கிக் கொண்டிருந்தது. அத்தனை வேகமில்லாவிட்டாலும், சுழித்துச் சுழித்து அன்னநடை நடந்த வைகையின் வெள்ளம், இடையிடையே எழுந்து நின்ற மணல்மேடுகளைச் சுற்றிச் சுற்றி

இனம் புரியாத மகிழ்ச்சியில் 'க்ளுக், க்ளுக்' கென்று நகைத்தபடி சென்று கொண்டிருந்தது. கரையோர மரங்களுக்குத் திரும்ப வேண்டிய கிளிகளும் மைனாக்களும், அந்த மணல் திட்டுக்களில் அமர்ந்து 'கீச் கீச்' சென்று எதையோ விவாதித்துக் கொண்டிருந்தன. கரையோர மரங்களுக்குச் சென்று சேர்ந்துவிட்ட பட்சிகள், வெள்ளம் மெல்ல உயருவதைக் கண்டு, மணல் திட்டுக்களிலிருந்த கிளிகளையும், மைனாக்களையும் வந்து விடுமாறு பெரிதாகக் குரல் கொடுத்தன.

புரவியிருந்து இறங்கி கண்ணெதிரே விரிந்த காட்சிகளை ரசித்துக் கொண்டிருந்த பராந்தகனின் நினைவு அரிசிலாற்றங்கரைக்குப் பறந்தது. "அங்கும் இதே மாதிரியான பட்சிகளின் கூச்சல் ஓயாமல் ஒலிக்கும். இத்தனை அகலமில்லாவிட்டாலும் அரிசிலாறு இன்னும் வேகமும் சுழல்களுமாக ஓடும். மரக்கூட்டங்களும் வயல்வெளியும் இன்னும் பசுமையை விரித்து வைத்திருக்கும். அரிசிலாற்றிலிருந்து இந்த வைகைக் கரைக்கு நான் வந்து சேர்வதற்குள் வாழ்வில் எத்தனை மாற்றங்கள்!" - பராந்தகனின் எண்ண ஓட்டத்தைப் பக்கவாட்டிலிருந்து ஒலித்த குரல் பட்டென்று அறுத்தது.

"அக்கரைக்குச் செல்ல வேண்டுமா பிரபு? படகு

# மகுட வைரம்

விஷ்வக்ஸேனனன்

செலுத்த வேண்டுமா?"

திரும்பிய பராந்தகனின் எதிரே ஒரு முதிய மனிதர், வெகு எளிய உடையில் நின்றிருந்தார். படகு ஒன்றும் சற்றுத் தள்ளி நீரில் ஆடியபடி நின்றிருந்தது.

"முதியவரே, நான் அழகர் ஆலயத்துக்குச் செல்ல வேண்டும். வழி எதுவென்று கூறுங்கள்" என்றான் பராந்தகன்.

"வாருங்கள். நேர் அக்கரையில் இறங்கி, இடதுபுறம் செல்லும் பாதையில் சென்றால், அழகர் ஆலயத்தை அடையலாம்" என்றார் அந்த முதிய படகோட்டி.

படகில் ஏறிய பராந்தகனைத் தொடர்ந்து, புரவியும் அனாயாசமாகத் தாவி படகுக்கு வந்து நட்ட நடுவில் நின்றது. வைகையில் படகுப் பயணம் அதற்குப் பழகிய ஒன்றுதான் என்பது புரிந்தது பராந்தகனுக்கு.

படகு நகர்ந்ததும் பராந்தகன் கேட்டான். "ஐயா, எனக்கு முன்பாக யாரும் ஆலயத்துக்குச் சென்றார்களா?"

"ஆம் பிரபு. நம் இளவரசியார் இரு நாழிகைகளுக்கு முன் சென்றார்" என்றார் படகோட்டி.

பராந்தகனின் சித்தத்தில் குழப்பம் எழுந்தது 'முகுந்தன் கூறியபடி இரு தினங்களாகத் தனக்காகக் காத்திருப்பவரைப் பற்றி இளவரசிக்கு ஏதும் தெரிந்திருக்குமோ? ஒருவேளை ஆலயத்தில் என்னைத் தனிமையில் சந்தித்து நேரிடையாக ஏதும் கேட்கக் காத்திருப்பாளோ?' என்று எண்ணியவனுக்கு, எப்படியும் தன் தீர்மானத்தின் உறுதி அன்று சோதிக்கப்படப் போகிறது என்பது புரிந்தது.

கரையை அடைந்து படகோட்டிக்கு பொற்காசுகளை அளித்து நன்றி கூறிய பராந்தகன், இடதுபுறம் அடர்ந்த மரங்களினினூடே சென்ற பாதையில் புரவியைச் செலுத்தினான். அரைக்காத தூரம் சென்றதும், 'நறுந்தேன் வார்புனல் சூழ் தண் மாவிருஞ்சோலை'யின் உயர்ந்த கோபுரமும், 'நியாயமான எந்த அபிலாஷையையும், திட்டத்தையும் நிறைவேற்றித் தர நம்பிக்கை ஒளியைத் தர நானிருக்கிறேன். சஞ்சலப்படாதே' என்று திட்டவட்டமாக அறிவித்து திடமாக நின்று எரிந்த உச்சித் தீபமும் அவன் சித்தத்துக்கு வேண்டிய தெளிவை அளித்தன.

கோபுர வாயிலில் பாண்டிய வீரர் நால்வர் நிற்க, அழகிய சிறு பல்லக்கு

ஒன்றும் ஓர் ஓரமாக வைக்கப்பட்டிருந்தது. துவஜஸ்தம்பத்தை வணங்கி உள்ளே நுழைந்தவனுக்குச் சன்னிதியில் இளவரசியும் பணிப்பெண்களும் நிற்பது புலப்பட்டது. கணீரென்ற குரலில் பட்டர் இசைத்த நாமாவளியும், பாசுரங்களும், நடப்பவை அனைத்தும் அவன் சித்தப்படிதான் என்பதைத் தெளிய வைத்ததால், வரவேற்ற பணிப்பெண்களையும், ஓரக் கண்ணால் நோக்கிய இளவரசியையும் விடுத்து, உள்ளே வெகு கம்பீரமாக நின்ற கள்ளழகர் மீது சலனமற்ற விழிகளைப் பதித்தபடி, சன்னிதியை நெருங்கினான் பராந்தகன்.



'உயர்ந்தது' என்ற சொல்லுக்கு ஒரு கம்பீரமான பொருளை அளித்த அந்த நெடியோனின் தோற்றம், சங்கமும் சக்கரமும், இடையில் தரித்த வாளும், குறுவாளும், ஆயுதபாணியாய்த் தெரிந்து, 'மனிதன் சித்தத்தைச் சூழ்ந்திருக்கும் மாய வலைகளை அறுக்க இத்தனையும் தேவைப்படுகின்றன' என்று அறிவித்தது. மாலிருஞ்சோலை மாலவனின் முகத்தில் வழிந்த வாத்ஸல்யமும், முறுவலுமே பராந்தகனின் சித்தத்தைத் தெளிய வைக்கப் போதுமானவையாக இருந்தன. பட்டர் அளித்த தீர்த்தத்தையும், திருத் துழாயையும் பெற்றுக் கொண்டவன், வெளியே இருந்த மண்டபத்தில் வந்து காத்து நின்றான். மண்டபத்தில் எரிந்த பந்தங்களும், சர விளக்குகளும் மேற்கூரையிலிருந்த சித்திரங்களையும், மண்டபத் தூண்களிலிருந்த சிற்பங்களையும் தெளிவாகக் காட்டின. மலைப்பகுதியிலிருந்து வீசிய காற்று, அவன் உள்ளத்தைப் போல உடலையும் குளிர வைக்க முயன்றது.

சற்று நேரத்தில் பணிப்பெண்கள் வெளியேறி மண்டபத்தின் வாசலில் காத்து நிற்க, 'ஜல் ஜல்'லென்ற பரல்களின் ஒலி கட்டியம் கூறி, இளவரசி நெருங்குவதை உணர்த்தியது. அவன் எதிரே வந்து நின்ற இளவரசியின் முகத்தை நாணமும் ஆவலும் அசல் குமுதமலராகவே சிவக்க அடித்திருந்தாலும், விழிகளில் ஜொலித்த உறுதி, அன்று விஷயத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்துவிட வேண்டும் என்ற தீர்மானத்திலிருப்பதைப் புலப்படுத்தியது.

பந்தங்களும், சரவிளக்குகளும் இளவரசியின் ஒரு பக்கக் கன்னத்தில் பாய்ச்சிய ஒளியும், சுருண்டு இறங்கி காற்றில் அசைந்து இலேசாக வருடிய குழற்கற்றையும், கவிழ்ந்த சிறு குடை போல் கற்கள் பதிக்கப்பட்டு ஊசலாடிய காதணியும், அவன் சித்தத்தில் சலனத்தை ஏற்படுத்த முயன்றன. நீரோட்டத்தால் சிவந்து இலேசாகத் துடித்த இதழ்கள் ஏதோ சொல்லத் துடிப்பதை அறிவித்தன. சங்குக் கழுத்தில் புரண்டு அவனை நோக்கி அசைந்தபடி கிடந்த முத்துச்சரம், 'உன் உறுதி எத்தனை தூரம் என்று பார்த்துவிடுகிறேன்' என்று நகைத்தது. விழிகளை உயர்த்தி அவள் விழிகளுடன் கலந்த பராந்தகன்,

"இளவரசியார் தகுந்த துணையும், காவலுமின்றி இந்த முன்னிரவு நேரத்தில் இத்தனை தூரம் வந்திருப்பது சரியல்ல" என்றான் மெல்ல.

இளவரசியின் பதில் திடமாக, தெளிவாக வந்தது "தகுந்த துணையை நாடித் தான் வந்தேன்" என்று.

அவள் வந்த நோக்கத்தையும், உள்ளக் கிடக்கையையும் தெளிவாகப் புலப்படுத்திய வார்த்தைகளைக் கேட்ட பராந்தகன், "இளவரசி, உங்கள் மனம் புரிகிறது. ஆனால்... இது சாத்தியமல்ல" என்றான் தீர்க்கமான குரலில்.

பராந்தகனிடம் தயக்கத்தையும், இருவருக்கிடையே இருந்த தாரதம்மியத்தைப் பற்றிய பதிலையும் எதிர்பார்த்து வந்திருந்த இளவரசிக்கு, அவன் குரலில் தொனித்த உறுதி, இன்னும் வேறு ஏதோ காரணமிருப்பதைப் புரிய வைத்தது. நிமிர்ந்து நன்றாக அவனை ஏறெடுத்தவள்,

"ஏன் சாத்தியமில்லை?" என்றாள்.

"நான்..." பராந்தகன் இலேசாக இழுத்தான்.

"மன்னர் இதை ஏற்பது பற்றித் தயங்கு



திர்களா? அது பற்றிய தயக்கம் வேண்டாம். மன்னர் ஏற்றுக் கொண்டு விட்டார். நாளை முதல் நீங்கள் சாதாரண வீரர் என்பதையோ, சோழ நாட்டு விவசாயி என்பதையோ கூற இயலாது"

"ஏன்?"

"நாளை அரசவை கூட்டப்பட்டு உங்களுக்குப் படைத் தலைமையில் ஒரு பதவியும், அந்தஸ்தும் அளிக்கப்படப் போகிறது. உரிய மாளிகையும், பொருள்களும், காவலர்களும் தயாராகிவிட்டன. பட்டயமும் எழுதப்பட்டு அரசவையில் அறிவிக்கப்படும். அதே சபையில் நமது..."

பராந்தகனின் கரம் உயர்ந்து அவளைத் தேக்கியது.

"சிக்கல் அங்குதான் இருக்கிறது இளவரசி."

"இதில் என்ன சிக்கல்? மன்னர் என் மனத்தை அறிந்த பின், உங்கள் படைத் தலைவர் விக்கிரமவரையருடனும், அநிருத்தருடனும், மற்ற பிரதானிகளுடனும் கலந்து செய்யப்பட்ட ஏற்பாடு இது வீரரே."

"ஆனால் இளவரசி. என்னையும், நான் இங்கு வந்த நோக்கத்தையும் முதலில் புரிந்து கொள்ளுங்கள். நான் விக்கிரமவரையருடன் பாண்டிய நாட்டுக்கு வந்தது பதவிக்காகவோ, அந்தஸ்துக்காகவோ, பாண்டிய இளவரசியை மணந்து கொள்ளவோ அல்ல. மன்னருக்கு நாளை அரசவையில் இப்படியேதும் அறிவிக்கும் உத்தேசமிருக்கும் பட்சத்தில், முன்னதாகவே கூறி தடுத்துவிடுங்கள். அரசவையில் அறிவித்து, அங்கேயே நான் மறுத்துக் கூறும் சங்கடமான நிலையைத் தவிர்த்துவிடுங்கள்."

இளவரசியின் திகைப்பு அவள் முகத்தில் தெளிவாகப் புலப்பட்டது. "ஏன் மறுக்க வேண்டும்?" என்றாள் திகைப்புடன்.

"இளவரசி, இந்தப் பதவியும், பட்டயமும் என்னைப் பாண்டிய நாட்டு மண்ணுடன் கட்டிப் போட்டு விடும். நான் இங்கு வந்தது என் சோழ மண்ணுக்கு உதவி கோரி. சோழ நாட்டு மக்கள் ராஷ்டிரகூடரிடமிருந்து விடுதலை பெற்று நிம்மதியான வாழ்வு பெற. அந்தப் பணி நிறைவேறிய பின் நான் வேறு எங்கும் ஒருகணம் கூடத் தங்க மாட்டேன். பதவியையும், அந்தஸ்தையும், ஏன், எனது இந்த வாளையும்கூட வீசியெறிந்துவிட்டு மீண்டும் என் வண்டாழஞ்சேரிக்குத் திரும்பி விடுவேன். மண்ணை நம்பி உழைத்து வாழும் அந்த எளிய வாழ்வில் பெறும் நிம்மதியை, எந்த அரச போகமும், பதவியும் தராது. இரு அரண்மனைகளையும், மன்னர்களையும் நேரில் கண்டபின் இந்த உண்மையைத் தெளிவாகவே புரிந்து கொண்டேன் இளவரசி" என்றான் பராந்தகன் திடமான குரலில்.

அவன் உறுதியைக் கவனித்த இளவரசி சற்று நேரம் மௌனமாக நின்றாள்.

"ஆக, இவற்றை மனத்தில் வைத்துக் கொண்டுதான் தயங்கினீர்களா?"

"ஆம், இளவரசி. ஆனால் இதுவரை எந்தச் சலனமுமின்றி நாட்டின் விடுதலை ஒன்றையே எண்ணியிருந்த என் மனத்தில் உங்களால் சலனம் ஏற்பட்டதும், என் மனத்தில் நீங்கள் ஓர் இடத்தைப் பிடித்து அமர்ந்துவிட்டதும் உண்மைதான். வண்டாழஞ்சேரியின் வயல்வெளியிலும், சேற்றிலும், வரப்பிலும், காற்றிலும் என் உயிர் கலந்திருக்கிறது. மன்னர் மகளான உங்களை, எந்தச் சுகபோகங்களுமற்ற எளிய வாழ்க்கைக்கு இழுத்து வருவது அநீதி. மன்னர் எந்த வசதிகளுமற்ற வாழ்வை மகளுக்கு அளிக்கச் சம்மதிக்க மாட்டார். ஒரு தந்தையின் கடமையும் அதுதான். எனவேதான் இது சாத்தியமல்ல என்றேன்."

இளவரசியின் விழிகள் பராந்தகனை வெறித்தன. பின் அவள் விழிகள் பராந்தகனைக் கடந்து, நேர் பின்னால் நின்ற கள்ளழகரின் மீது பதித்து நின்றன சில



# இப்படி எப்படி?

இந்த உலகம்
ஏன் இப்படி இருக்கிறது?

இந்த வாழ்க்கை
ஏன் இப்படி இருக்கிறது?

இந்த மனிதர்கள்
ஏன் இப்படி இருக்கிறார்கள்?

இந்த அரசு
ஏன் இப்படி இருக்கிறது?

இந்த சமூகம்
ஏன் இப்படி இருக்கிறது?

இந்த அரசியல்
ஏன் இப்படி இருக்கிறது?

இந்தக் கலை இலக்கியம்
ஏன் இப்படி இருக்கிறது?

இந்த எளியவர்கள்
ஏன் இப்படி இருக்கிறார்கள்?

ஏதாவது
இயல்பாக இருக்காதா?

யாராவது
தன்மையாக இருக்க மாட்டார்களா?

இப்படி இப்படி இருந்தால்
வேறெப்படி இருக்கும் இந்தக் கவிதை!

இது இது போல எல்லாம் இருந்தால்
எதுபோல இருக்க, ஒரு கவிஞன்!

- **விக்ரமாதித்யன் நம்பி**

கணங்கள். அவன் குமுதவிழிகளில் எழுந்த கேள்விக்கு அவர் பதிலளித்திருக்க வேண்டும். மீண்டும் பராந்தகனை நோக்கிய இளவரசியின் முகத்தில் தெளிவு புலப்படத் தொடங்கியது.

நன்றாக ஏறெடுத்து அவனை நோக்கியவள் "வீரரே, உங்கள் நோக்கம் ஈடேறும் நாள் அதிக தூரத்தில் இல்லை. ஏறக்குறைய அனைத்து ஏற்பாடுகளும் முடிந்து விட்டன. சோழ நாடு மட்டுமல்ல, தமிழகம் முழுவதுமே ராஷ்டிரகூடரிடமிருந்து விடுதலை பெறும். அதுவரை உங்கள் நிழலாக நானிருப்பேன். நீங்கள் வண்டாழஞ்சேரிக்குத் திரும்பும்போது உங்கள் துணையாக நான் வருவேன். வாழ்வை மகிழ்வோடு பகிர்ந்து கொள்வேன். மன்னரும் மறுக்க மாட்டார். ஏனெனில், அவர் எனக்காக நிர்ணயிக்கும் வாழ்வைவிட, உயர்ந்த வாழ்வும், அந்தஸ்தும் சோழ நாட்டில் எனக்குக் கிடைக்கும்."

பராந்தகன் முகத்தில் வியப்பு படர்ந்தது.

"சோழ நாட்டில், வண்டாழஞ்சேரியில் எனக்குப் பதவியோ, பெரும் வசதிகளோ, உயரிய அந்தஸ்தோ கிடையாதே இளவரசி" என்றான் பராந்தகன்.

இளவரசியின் இதழ்களிலிருந்த குறுநகை இன்னும் மலர்ந்தது. அடுத்து அவள் கூறிய விளக்கம் பராந்தகனை மட்டுமல்ல, மண்டபத்தின் மூலையில் வேற்று மனிதர் ஒருவருடன் அரையிருளில் பதுங்கி நின்ற முகுந்தனையும், உடன் ராஜரீக உடையுடன் கம்பீரமாக நின்ற அந்த மனிதரையும்கூட அசர அடித்தது.

(தொடரும்)

# ஆலு தூத்வாலே!

ஆலு தூத்வாலே... என்ன, பேரே கும்முன்னு இருக்குல்ல? அதானே உங்க மைக்ரோவேவ் மாமி. லாஸ்ட் வீக் நானும் மாமாவும் டெல்லிக்குப் போயிருந்தோம். அங்க எங்க அண்ணா என்னை ஒரு ஹோட்டலுக்குக் கூட்டிண்டு போனார். என்ன வேணும்னு கேட்டதும், இந்தப் பேர் நேக்கு ரொம்பப் பிடிச்சுப் போகவே, அதையே ஆர்டர் பண்ணிட்டார். வந்ததும் சாப்பிட்டுப் பார்த்தேன்... அப்பப்பா... இன்னிக்கும் அந்த ருசி அடி நாக்குல இனிச்சுண்டே இருக்கு. சரி... சரி... அதை எப்படிச் செய்யறதுங்கறதுக்க முன்னால அதுக்கு என்னென்ன தேவைப்படறதுன்னு சொல்லிடறேன்.

பெரிய உருளைக்கிழங்காப் பார்த்து அஞ்சு இல்ல ஆறு. ஒரு டேபிள் ஸ்பூன் நெய், பால் கால் லிட்டர், 150 கிராம் சர்க்கரை, முக்கால் கிண்ணம் ஏலக்காய் பவுடர், கால் டீஸ்பூன் ஜாதி பத்திரி பவுடர், நாலஞ்சு செர்ரி பழங்கள், முழு முந்திரி கொஞ்சம், அவ்ளோ தான்.

உருளைக் கிழங்கை தோல் சீவி, நன்னா வேக வச்சி எடுத்துக்கோங்கோ, வேக வச்ச கிழங்கை மசிச்சு, நெய் விட்டு நாலு நிமிஷத்துக்கு வதக்கணும். எடுத்து வச்சிருக்கிற பாலை அதுல விட்டு, தொடர்ந்து கிளறுங்கோ. நன்னா கெட்டிப் பதம் வர்ற வரைக்கும் கிளறணும். ஓ.கேவா? இப்போ சர்க்கரையையும், ஏலக்காய், ஜாதி பத்திரி பவுடரையும் அதுல் மிக்ஸ் பண்ணி நன்னா வேக விடுங்கோ. (கிளறச்சே வாணல்ல ஒட்டிக்கப்படாது. நன்னா வேகணும்) சுவையான பொட்டட்டோ தூத்வாலே ரெடி. அதை தட்டுல அழகா வச்சி, அதும்மேல ரெண்டு செர்ரி, ரெண்டு முந்திரி சொருகி, உங்க பசங்க முன்னால வச்சேன்னா... அஞ்சு செகண்ட்ல, இட்ஸ்...கான்...தான்...

மைக்ரோவேவ் மாமி



# சுனாமி அரசியல்



சமீபத்தில் ஒரு நாள், தீனன் என்பவர் தலைமையில் தலித் அமைப்பு ஒன்று மாநகராட்சி வளாகத்தில் ஆர்ப்பாட்டம் நடத்தியது. 'மாநகராட்சியின் செயல்பாடுகளை எதிர்த்து ஆர்ப்பாட்டம் போலிருக்கிறது' என்று பார்த்தால், கோஷங்கள் வித்தியாசமாக இருந்தன. 'செல்வாவைக் கைது செய்' என்று கோஷம். ஜயேந்திரர் கொலையில் கைது செய்யப்பட்டுள்ள அப்புவும், செல்வாவும் ஒரு காலத்தில் தொழில் நண்பர்களாம். ஆனால் விஷயம் என்னவென்றால், செல்வா, மாநகராட்சி காங்கிரஸ் தலைவர் ராயபுரம் மனோவின் சகோதரர். "நாங்கள் மாநகராட்சியில் ஆணித்தரமாக எழுப்பும் பிரச்னைகளுக்கு பதிலளிக்க முடியாத ஆளும்கட்சி, இது போன்ற லெட்டர் பேட் ஆசாமிகளைத் தூண்டிவிட்டு வீண் பழி போட்டு ஆர்ப்பாட்டம் நடத்த ஏற்பாடு செய்கிறது" என்கிறார்கள் மாநகராட்சி காங்கிரஸ் பிரமுகர்கள்.

சட்டமன்ற உறுப்பினர் விடுதியின் பக்கமாகப் போய்க் கொண்டிருந்தபோது காதில் விழுந்தது. "ஒண்ணும் பண்ண முடியலப்பா. நிதி நிலைமை ரொம்ப டைட்டா இருக்கு. கட்சிக்காரங்க வெறுத்துப் போய் இருக்காங்க. இப்படியே போனால் நான் என்னோட கட்டடப் பொறியாளர் வேலையைப் பார்க்கப் போக வேண்டியதுதான்." நண்பர்களிடம் இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தவர், பெரணமல்லூர் தொகுதி ஆளுங்கட்சி சட்டமன்ற உறுப்பினர் அன்பழகன். 'ஆமாண்ணே' என்று 'உம்' கொட்டியது உடனிருந்த கும்பல்.

“தலைவரின் நாற்பதாவது பிறந்த நாளை தமிழகம் முழுவதும் அட்டகாசமாகக் கொண்டாட திட்டம் போட்டிருந்தோம். ஆனால் துரதிஷ்டவசமாக முதலில் நரஸிம்மராவ் மரணத்தைத் தொடர்ந்து நிகழ்ச்சிகளை ஒத்தி வைக்க நேர்ந்தது. துக்க காலம் முடிந்ததும் மறுபடி ஏற்பாடு செய்தோம். பெரிய சோகமாக 'சுனாமி' வந்துவிட்டது. மறுபடியும் தள்ளி வைக்க வேண்டியதாகிவிட்டது" என்று வருத்தப்படுகிறார்கள் ஜி.கே. வாசனுக்கு நெருங்கிய காங்கிரஸ் பிரமுகர்கள்.

'கலைஞருக்கு என்னதான் ஆயிற்று?' ஊர் வாயை மூட முடியாமல் வதந்தி, 'தந்தி'யில்லாமல் தமிழ்நாடு முழுவதும் பரவ, அப்பலோவில் சிகிச்சையிலிருந்த கலைஞர் தொலைக்காட்சியில் செய்தி சேனல்கள் மூலம், சுனாமி பற்றி லேட்டஸ்ட் தகவல்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். இரவு வரை பொறுத்துப் பார்த்த அன்பழகனும், ஆற்காட்டாரும் "நீங்க தொலைக்காட்சியில் ஒரு முறை வந்து விடுங்கள். அப்போதுதான் முற்றுப்

பாலிடிக்ஸ் பஜார்







புள்ளி வைக்க முடியும்'' என்று கேட்டுக் கொள்ள, எட்டரை மணிவாக்கில் ஒப்புக் கொண்டார் கலைஞர். இடுப்பு வலிக்காக மயோட் ஆஸ்பத்திரிக்கு சிகிச்சைக்குப் போன போது, கொடுக்கப்பட்ட மருந்துகளால், குறைந்த ரத்த அழுத்தப் பிரச்னை வந்துவிட்டதாம். அதுதான் அப்பல்லோவில் சிகிச்சையாம். அறிவாலய வட்டாரம் சொல்கிறது.

''நெற்றிக்கண்' என்ற பத்திரிகையின் ஆசிரியர் ஏ.எஸ்.மணி பேரில் எட்டு பிரிவுகளில் அவர் மேல் வழக்குப் போட்டிருக்கிறது போலீஸ். ''கைது செய்ததற்கு த்ரிஷா விவகாரம் ஒரு காரணம். அவ்வளவுதான். உண்மையான விஷயம் என்னவென்றால், ஜயேந்தரர் போலீஸ் விசாரணையின் போது எடுக்கப்பட்ட படங்கள் (எங்களுக்கும் கொடுக்கப்படாமல்) மற்றொரு பத்திரிகைக்கு மட்டும் போலீஸ் எப்படிக் கொடுத்தது?'' என்ற கேள்வி எழுப்பியதுதான் போலீஸின் கோபத்துக்கு காரணம் என்கிறது நெற்றிக்கண் வட்டாரம்.

வருடத்துக்கு ஒரு முறை குடும்பத்தோடு வெளிநாடுகளுக்குச் செல்வது டாக்டர் ராமதாஸின் வழக்கம். அது போலதான் சமீபத்தில் அவரும் மத்திய அமைச்சர் அன்புமணியும் குடும்பத்தோடு வெளிநாடு சென்றார்கள். ஆனால் அவர்கள் அங்கிருந்த சமயம் பார்த்து 'இங்கு சுனாமி' வந்துவிட்டது. ''அங்கிருந்தபடியே ஐயா எங்களை இயக்கிக் கொண்டிருக்கிறார். சென்னையிலிருந்து நாகப்பட்டினம் வரை எங்கள் தொண்டர்கள் துயர் துடைப்புப் பணியில் தீவிரமாக இறக்கியிருக்கிறோம். மணிக்கொரு முறை ஐயாவுக்குத் தகவல் சொல்லிக் கொண்டிருக்கிறோம்'' என்கிறார்கள் பா.ம.க. மூத்த பிரமுகர்கள்.

சோகத்திலும் 'அரசியலை' மறக்காமல் இருப்பவர்கள் கழகத் தோழர்கள் (இரண்டு கழகத்திலும்தான்) நீலாங்கரையில் பாதிக்கப்பட்டவர்களுக்கு உணவு வழங்குவதற்குக் கூட, ஆளுங்கழகமும் தி.மு.க.வும் தனித்தனிக் கொட்டகைகள் போட்டு, மேலே கொடிகள் பறக்க உணவுப் பொட்டலங்களை விநியோகித்தன. இந்த நிலையில் ''இந்த துயர் துடைப்புப் பணியில் ஸீனியர் அமைச்சரான டி.ஆர். பாலுவுக்கு உரிய முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை'' என்று அவரது ஆதரவாளர்கள் வருத்தப்பட்டுக் கொண்டனர்!

- கௌசி

# நீங்கள் கேட்டவை – தராசு

● கே.எஸ்., குமாரபாளையம்.

? த்ரிஷா விவகாரம் குறித்து...?

! 'நெற்றிக்கண்' பத்திரிகையின் ஆசிரியர் கைதாகியிருக்கிறார் என்பதைக் கவனித் தீர்களா...? மலிவான பரபரப்பு தேடுவதற் காக எழுதப்படும் விஷயங்களுக்கு எவ் வளவு மதிப்பு தரலாமோ, அவ்வளவுதான் இதற்கும் தரலாம்.

## அப்பு–சுப்பு–பிடிக்கக் கிடைத்த துப்பு..?

● என். ரங்கநாயகி, கோயமுத்தூர் - 9.

? அண்ணா பல்கலைக் கழகத்தில் மாண வர்கள் மொபைல் ஃபோன் பயன்படுத் தத் தடைவிதித்தது போல், மற்றக் கல் லூரிகளும் தடை விதிக்கலாமல்லவா...?

! நல்ல காரியம். பரீட்சையில் காப்பி அடிக் கக்கூட செல்ஃபோனைப் பயன்படுத்த முடியும். அண்ணா பல்கலைக் கழகம் செய்த இன்னொரு நல்ல காரியம், பல்கலைக் கழக வளாகத்தில் புகை விடும் வாகனங்கள் கூடாது என்று தடை விதித்தது. நகரில் இது போன்ற தூய்மைத் தீவுகள் அதி கரிக்க வேண்டும்.

● ஏ.எம். பழனிச்சாமி, சிங்காநல்லூர்.

? பட்டினிச் சாவுக்கு உலகம் முழுவதும் வருடந்தோறும் ஐந்து இலட்சம் குழந்தைகள் பலியாவதற்கு யார் முழுப் பொறுப்பு...?

! பின்தங்கிய நாடுகளிலே தான் பெரும்பாலும் இத் தகைய சாவுகள் நிகழ்கின் றன. அவற்றின் மக்கள் முன் னேறக் கொள்கை, திட்டம் செயல்பாடு அற்ற அரசுகள்; மக்கள் நலனைச் சிந்திக்காத சுயநலத் தலைமை - இவை தான் காரணம்.

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.

? 'தனது 'மும்பை எக்ஸ்பிரஸ்' படத்தின் பெயரை மாற்றம் செய்யக்கூறி இடையூறு செய்ய வேண்டாம்' என ராம தாஸைக் கோருகிறாரே கமல்...?

! நியாயமான கோரிக்கை. ஏற்பதுதான் முறை.

● எம். சிவகுருநாதன், தஞ்சை.

? சந்நியாசிகள் ஒழுக்க நெறி தவறக் கூடாது என்று சேலம் குட்டி சாமியார் சொல்லியிருப்பதுடன், தமக்கு ஜயேந்திரர் சூட்டிய 'ஸ்ரீ வித்யா சங்கர சரஸ்வதி' எனும் பெயரை இனி பயன் படுத்த மாட்டேன் என்றும் தெரிவித்திருப் பது பற்றி...?

! முதல் கருத்து அனைவரும் ஏற்கக் கூடியதே. இரண்டாவது கருத்து இவரே தீர்ப்பு வழங் கியது போல் தொனிக்கிறது. தவிர்த்திருக்கலாம். அல்லது ஜயேந்திரர் விடுதலையாகி வரும்வரை பயன்படுத்த மாட்டேன் என்று கூறி யிருக்கலாம்.



• தீர்ப்பு தொனி!

● ச.ஆ.கேசவன், இளம்பிள்ளையாச்சி.

? நம் தமிழ் அன்னை யைச் செயல் மறந்துதான் வாழ்த்த வேண்டுமா...?

! கேசவா! ராகவா! கவிதை நயத்தைக் காணாமல் விதண்டா வாதம் செய்ய லுமா...? அது ஒருபுறம் இருக்க, வியக்கும் கணங்களில் செயல் மறந்துதான் போகும். வாழ்த்திய பிறகு மீண்டும் செயல் தொடர லாம். செயலற்றுப் போகச் சொல்லவில்லையே கவிஞர்!

● என்.எஸ். பாலமுருகன், திருவண்ணாமலை.

? அப்பு - சுப்பு - பிடிக்கக் கிடைத்த துப்பு...?

! விளையாடியிருக்கு நிறைய டப்பு!

● டி.எஸ்.டி. ராயன், நல்லத்துக்குடி.

? நிஜங்களை விட பொய்கள் விச்வரூபம் எடுத்து விடுவது எப்படி...?

! அவை அச்சத்தை ஊட்டும் வகை யில் மிகைப் படுத்தப் பட்டு வளைய விடப்படுவதால். உதாரணம்: 27.12.04

• பரபரப்புக்குப் பலி!

வதந்தி.

● வே. பாலா, திண்டுக்கல்.

? 'நான் ஒரு அப்பாவி. அரசியல்வாதிகள் என்னைக் கெடுத்து விட்டார்கள்' என்று அப்பு பேட்டியளித்துள்ளது...?

! பல மாஃபியாக்காரர்கள் அவ்வப்போது அரசாங்கம் நடத்துகிறவர்களால் ஆசை காட்டப்பட்டு, தவறுகள் இழைக்கத் தூண்டப்பட்டு, கடைசியில் என்கௌண்டர்களுக்குப் பலியாகிறவர்கள்தாம். எனவே 'அரசியல்வாதிகள் என்னைக் கெடுத்து விட்டார்கள்' என்பது சரியாக இருக்கலாம். ஆனால் அதனால் அப்பு அப்பாவி ஆகிவிட மாட்டார்!

● எஸ். இராமலிங்கம், ஆத்தூர்.

? 'மாதங்களில் நான் மார்கழி' என கிருஷ்ண பரமாத்மா கூறிய போதிலும், மார்கழியில் சுப காரியங்கள் செய்யாமல் ஒதுக்கியே வைத்திருக்கிறார்களே, ஏன்...?

! இறைவனை நினைத்து நம்மை அவனுக்கு அர்ப்பணிக்க வேண்டிய நோன்பு மாதம் என்பதால், போகங்களைத் தவிர்க்கும் மாதமாக இது கருதப்படுகிறது.

● மு. நடராஜன், பாண்டிச்சேரி - 8.

? சென்னை நகருக்கு உண்மையிலேயே கிருஷ்ணா நதி நீர் கிடைக்க, 152 கி.மீ நீள கால்வாய் 'சாயி டிரஸ்ட்' மூலம் இருநூறு கோடி ரூபாய் செலவில் சீரமைத்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. தமிழக இந்நாள், முன்னாள் முதல்வர்கள் இது குறித்து என்னதான் சொல்கிறார்கள்?

! இத்தனை பெரிய பொதுக் காரியத்துக்குச் சம்பிரதாயமாகக்கூட நன்றி தெரிவிக்க மாட்டார்கள். அப்புறம் இவர்களுடைய முக்கியத்துவம் என்ன ஆவது?

● கே. கணேசன், சென்னை - 5

? தமிழ்த் திரைப்படங்களுக்கு ஆங்கிலப் பெயர் வைப்பதைவிட தப்பும் தவறுமாக தமிழிலேயே பெயர் வைப்பது - 'ஜணணம்' என்பது போல் - கொடுமைதானே?



• நியாயமான கோரிக்கை



• அப்பாவி அறிக்கை!

! 'இது நியூமராலஜி அறிவுரைப்படி தெரிந்தே செய்த தவறு' என்கிறார் இயக்குனர். தெரிந்தே இரண்டு சுழியை மூன்று சுழியாகப் போட்டதால் பலன் உண்டா என்றால், இப்போது படத்தின் சுழியும்



* பண்பாட்டுக் கொள்கை!

சரியில்லையே! கதையில் நல்ல செய்தி யிருப் பினும், படம் பிசுபிசுத் துப் போச்சே!

● சியாமளா ஈஸ்வரன், தேவூர் மேட்டுக்கடை.

? 'இனி தமிழ்ப்படங் களை தமிழ்க்காரர்கள் தான் தயாரிக்க வேண் டும். அதில் தமிழ் நடிகர் கள்தான் நடிக்க வேண்டும் என்று வலியுறுத்துவோம்' என ராமதாஸ் சொல்கிறாரே...?

! தமிழ்நாட்டில் விளைந்த, தமிழ் நாட்டிலேயே தயாராகி, தமிழ் பண்பாட் டுக்குரிய உணவுப் பொருள்களை மட்டுமே தமிழன் சாப்பிட வேண்டும் என்று வலியுறுத்துவாரா...?

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

? பிரதமரின் மனைவி மத்திய அமைச்சர்களின் மனைவிகளுக்கு விருந்தளித்திருப்பது பற்றி...?

! சமையல் கேஸ் விலை மாசா மாசம் ஏறாதுன் னுட்டாங்க இல்ல.. அந்த சந்தோஷத்தைக் கொண் டாடியிருப்பாங்க.



● நகை. தி. மகராசன், சின்னமனூர் *

* சப்பாத்தி ஒழிக!

? அரசுக்கு வர வேண்டிய வாராக்கடன் 50,000 கோடி ரூபாய் அளவுக்குத் தேங்கி பயன்பாடின்றிக் கிடக்கிற தாமே...?

! வாராக்கடன் பெற்றவர்களில் அரசியல் வாதிகள் எத்தனை பேர் என்ற கணக்கை அரசு கொடுக்காது. கடன் திரும்ப வருமா என்று கடன் கொடுப்பதற்கு முன்பே யோசிக்க வேண்டிய அரசு, கடன் கொடுத்த பிறகு யோசிக்குமானால், மக்களு டைய வரிப்பணத்துக்கு நஷ்டக்கணக்கு மட்டுமே காண்பிக்க முடியும்.

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? 'பசிக்கு ரொட்டி, பண்புக்கு ராமர் என்பதுதான் நமது கொள்கை' என்கிறாரே உமாபாரதி?

! 'அரசியலுக்கு அயோத்தி' என்று சேர்த்துக் கொண்டிருந்தால் அப்படிப் போடு (அரிவாளை) திரிசூலத்தை என்று வியக்கலாம்!

எஸ். அசாதி, பெருமாள்தேவன்பட்டி.

? பெஸ்ட் பேக்கரி வழக்கில் முக்கிய சாட்சியாக உள்ள ஜகிரா பல்டி அடிக்க, குஜராத் அரசு 18 லட்சம் ரூபாய் லஞ்சம் கொடுத் துள்ளதாக பா.ஜ.க - எம்.எல்.ஏ மது ஸ்ரீ வத்ஸ வாவே கூறியதாக தெஹல்கா பத்திரிகைச் செய்தி வெளியிட்டுள் ளதே...?

! ஜகிரா மிரட்டலுக்குப் பணிந்தும், பணத்துக்கு அடிமையாகியும் பல்டிக்கு மேல் பல்டி அடித்ததை, அவரது குடும்பத் தினரே வெறுத்து அவரைக் கடுமை யாகச் சபித்தும் இருக்கிறார்கள். இத் தனை முதுகுக் குத்தல்களுக்கு மத்தியில் உண்மை பலியாகாமல் தப்பிக்கவா போகிறது?

❐ ரூ 100 பரிசு பெறுபவர்:
கே. கணேசன்,
28, குப்புமுத்து தெரு,
சென்னை - 600 005

★ ரூ 50 பரிசு பெறுபவர்:
நகை. தி. மகராசன்,
125, ஏ. வ.உ.சி திடல்,
எஸ்.பி.கே. ரோடு,
சின்னமனூர் - 625 515

# சின்னான் செய்திகள்

'உமா பாரதி' சென்ற வாரம் மூன்றாவது இடத்தில்! இந்த வாரம் முதலிடத்தில்! வாரா வாரம் 'சின்னான் பக்கத்தில்' இடம் புடிக்கறதுக்காக அவங்க பண்ற ரவுசு தாங்க முடியல. அதான் 'குண்டா' நகரிலிருந்து, டெல்லிக்கு 'வைஷாலி எக்ஸ்பிரஸ்'ல தனிப் பெட்டியில போயிருக்காங்க, ஆனா டிக்கெட் எடுக்கலையாம். டி.டி.ஆர். 'பைன்' போட்டுத் திட்டிட்டாராம். 'டிக்கெட் இருந்துச்சி. ஆனா கன்ஃபார்ம் ஆகல. இது லல்லுவோட லொள்ளு' அப்படின்னு பி.ஜே.பி. அறிக்கை விட்டிருக்காம். ஆமாமா, 'உமா பாரதி' எவ்ளோ சமர்த்துப் பிள்ளை!

ஒரு குண்டூசியை ரொம்ப அழகா 'ஒல்லியா' ஏதாவதொரு நாடு தயாரிச்சாப் போதும், அந்த டெக்னாலஜியை அப்படியே 'ஈயடிச்சான் காப்பி' அடிக்கிறதுல தைவான் முதலிடத்துல இருக்காம். இப்படி எந்தப் பொருளையும், எந்த நாட்டையும் காப்பி அடிக்கிறதுல தைவானை மிஞ்ச ஆளே இல்ல. ஆனா தென் ஆப்பிரிக்கா கொஞ்சம் பெட்டர். அது புதிய விஷயத்தை மட்டும் எடுத்துக்கிட்டு தன்னோட டெக்னாலஜியை 'யூஸ்' பண்ணிக்குமாம். (இருந்தாலும் 'காப்பி' அடிக்கறதுல நம்ம சினிமாக்காரங்களை மிஞ்ச முடியுமா!)





• அப்துல் கலாம்



• உமா பாரதி

கேரளாவில சாராவுக்கு ஒரு போன். எதிர்முனையிலிருந்து ஒரு கண்ணியமான குரல் "சாரா, சுகம்தானே! குல்முகமதுக்கு என் ஆசாம்சங்கள்", சாரா அப்படியே உருகிவிட்டார். காரணம், பேசியது அப்துல் கலாம். சாராவும், குல்முகமதுவும் சிப்பிக் காளான் வளர்ப்புல பண்ணின சாதனையைப் பாராட்டி கலாம் போன் பண்ணியிருக்காரு. அதுக்காக, "நான் மெட்டி ஒலியை 200 எபிசோடா தொடர்ந்து பாக்குறேன்." "பெப்ஸி உங்கள் சாய்ஸ்ல 12 தடவை பேசியிருக்கேன்" அப்படின்னு உங்க சாதனையை கலாமுக்கு மெயிலா அனுப்பினீங்கன்னா, கலாம் இல்ல, இந்த சின்னான் கூட ஃபோன் பண்ண மாட்டேன். ஆனா இப்ப என் செல்ஃபோனை என்னால நேருக்கு நேரா பார்க்க முடியல. அது என்னை ரொம்ப கேவலமாப் பார்க்குது.

மகாத்மா, புத்தர், தெரசான்னு கட்அவுட் வைக்கறது, கண்ட மேனிக்கு கால்ல விழறது, அவரு பல்லுபட்ட கேக்குக்கு பாய்ஞ்சு, பிராண்டி சண்டை போடுறதுன்னு, ஜனவரி 9ல் வர்ற சோனியா பிறந்தநாளை, காங்கிரஸ் தொண்டர்கள் கொண்டாட ஆரம்பிச்சுட்டாங்க. என்னத்தச் சொல்ல, வடக்கேன்னாலும், தெற்கேன்னாலும், தொண்டர்கள் 'அரைவேக்காடா'வே அலையறாங்க!

திருநெல்வேலி ராயல் தியேட்டரில் 'களத்தூர் கண்ணம்மா' 106 நாட்கள் ஓடியது.

சென்னையில் வெலிங்டன் தியேட்டர் கிடைக்காததால், பிளாஸாவில் ரிலீஸ் செய்தோம். முதல் வாரம் கலெக்ஷன் பதினாலாயிரம் ரூபாய். அடுத்த வாரம் பன்னிரண்டாயிரமாகி, மூன்றாவது வாரம் பத்தாயிரத்துக்கு வந்து விட்டது. படம் ரிலீஸாகி பத்தாவது வாரத்தில், தீபாவளிப் பண்டிகை. தீபாவளி ரிலீஸான 'பாவை விளக்கு' படத்துக்காக அந்தத் தியேட்டரைக் கேட்டிருக்கிறார்கள்.

"கலெக்ஷன் குறைந்து கொண்டு வருகிறது. பாவை விளக்குக்குத் தியேட்டர் கேட்கிறார்கள். ஆகவே ஒன்று செய்கிறோம். உங்களுக்காக வாடகையை நாங்கள் குறைத்துக் கொள்கிறோம். எனவே 'ரெவின்யூ' குறையாது. பத்து வாரத்தில் படத்தை நிறுத்திக் கொள்கிறோம்" என்று தியேட்டர் தரப்பிலிருந்து என் தந்தையைக் கேட்டார்கள்.

"அதற்கென்ன, சரி" என்றார் அப்பச்சி.

ஆனால் அந்தப்படம் பத்தாயிரம் ரூபாய் கலெக்ஷனுக்குக் குறையாமல் 'மெயின்டெயின்' பண்ணிக் கொண்டிருந்தது. எட்டாவது வாரத்தில் பன்னிரண்டாயிரம். படத்தை எடுக்க வேண்டி வந்த போது, கலெக்ஷன் பதினாலாயிரம் ரூபாய்.

திண்டுக்கல்லில் பாவமன்னிப்புக்குக் கலெக்ஷன் இருபத்தாறாயிரம் ரூபாய், களத்தூர் கண்ணம்மா இருபதாயிரம். கல்யாணப் பரிசு பதினாலாயிரம்தான் கலெக்ட் பண்ணியிருந்தது. அனேகமாகச் எல்லாச் சிறிய ஊர்களிலும் கல்யாணப் பரிசை விட, களத்தூர் கண்ணம்மா நன்றாகப் போனது. நகரங்களைப் பொறுத்த வரை, கல்யாணப் பரிசுக்கு பிரமாதமான கலெக்ஷன். சந்தேகமில்லை. களத்தூர் கண்ணம்மா அதன் அருகே கூட நெருங்க முடியவில்லை. ஆனால் பி அண்ட் சி ஏரியாக்களில், கல்யாணப் பரிசை களத்தூர் கண்ணம்மா வசூலில் முந்தியது. இந்தப் படத்தை எம்.எல். மெய்



★ களத்தூர் கண்ணம்மா



★ மூகநோறு

# "படத்தை நிறுத்து!"

பத்து வாரத்தில் படத்தை நிறுத்திக் கொள்கிறோம்

அதற்கென்ன, சரி!

யப்பனும், கேடி. சுப்பையாவும் மதுரை, ராமநாதபுரம் மாவட்டங்களுக்கு வாங்குவதாகத் திட்டமிட்டிருந்தார்கள். கடைசி நேரத்தில் மெய்யப்பன் பின் வாங்கி விட்டார். இந்த விஷயத்தைச் சொல்லி, 'என்னால் படத்தை வாங்க முடியாது. மன்னித்துக் கொள்ளுங்கள்' என்று என் தந்தையிடம் வருத்தப்பட்டார் சுப்பையா.

"நீங்க ரெண்டு பேரும் பார்ட்னர்ஸா?" என்று கேட்டார் அப்பச்சி.

"இல்லை. ரெண்டு லட்சத்து இருபத்தையாயிரம் ரூபாய்க்கு அவுட் -ரைட்'டா வாங்க, மொதல்ல இருபத்தையாயிரம் ரூபாயை அவர் அட்வான்ஸா கொடுத்திட வேண்டியது. அப்புறம் நான் தியேட்டர்காரர்களிடம் டெபாஸிட் கலெக்ட் பண்ணி, மீதி ரெண்டு லட்சத்தைக் கொண்டு வந்து உங்களிடம் தர வேண்டியது. ரெண்டு லட்சத்துக்கு மேலே வருவதில், நாங்கள் ஆளுக்குப் பாதி லாபம் எடுத்துக் கொள்ள வேண்டியது என்று திட்டம். ஆனா இப்ப அவர் திடீரென்று பின் வாங்கிட்டார்."

"இப்ப என்ன... உங்களால இருபத்தையாயிரம் ரூபாய்தானே தரமுடியாது... வேணாம்... நீங்க அந்த ரெண்டு லட்சம் ரூபாயை மினிமம் கியாரண்டியாப் போடுங்க. நான் உங்களுக்குப் படத்தைத் தர்றேன்" என்று என் தந்தை அப்படியே செய்தார்.

படம் பிரமாதமாக ஓடி, சுப்பையா லாப மழையில் நனைந்தார். தான் பின் வாங்கி விட்டது பற்றி மெய்யப்பன் பிறகு ஒரு முறை என் அறையில் என்னோடு பேசிக் கொண்டிருந்தபோது வருத்தப்பட்டார். "கிட்டத்தட்ட ஐம்பது, அறுபதாயிரம் லாபம் பார்த்திருப்பேன்... போச்சு" என்று ஆதங்கப்பட்டார்.

அப்படி 'களத்தூர் கண்ணம்மா' எங்களுக்கு மட்டுமல்லாமல், அதில் தொடர்பு கொண்ட அனைவருக்கும் ஏற்றம் தந்தது. கலையுலகத்துக்கு கமல்ஹாசன் என்கிற அற்புதக் கலைஞனை அந்தப் படத்தின் மூலம் என் தந்தை அடையாளம் காட்டியது, எங்களுக்கெல்லாம் நியாயமான பெருமை.






ஏவி.எம்.சரவணன்

அந்த நாள் ஞாபகம் - 10

# திரையுலக நினைவுகள்

அந்தப் படத்தை நாங்கள் தமிழோடு விட்டுவிடவில்லை. முதலில் அதை 'மாவூரி அம்மாயி' என்ற பெயரில் தெலுங்கில் 'டப்' பண்ணி வெளியிட்டோம். சாவித்திரி, தெலுங்கிலும் அப்போது பிரபலமாக இருந்தார். படம் நன்றாகவே ஓடிற்று.

''போதும்பா... படத்தை நிறுத்தச் சொல்லு'' என்று ஒரு நாள் என் தந்தை சொன்னபோது, எங்களுக்கு ஏனென்று புரியவில்லை.

''நல்லாத்தான் போவுது. ஆனா நாம அதை 'டப்' பண்ணியிருக்கக் கூடாது. தெலுங்கில் திரும்பவும் புதுசா எடுக்கணும்பா'' என்றார்.

'மூகநோமு' படப்பிடிப்புக்காக ஹைதராபாத்தில் இருந்தபோது, சினிமா அல்லாத சில சுவையான அனுபவங்கள் ஏற்பட்டன. மாலை வேளைகளில் நானும் என் சகோதரர் குமரனும், ஹைதராபாத்



• மெகா கடிகாரத்துடன்...

வீதிகளில் 'ஹாய்'யாக நடந்து போய் வருவோம். அப்போது ஒரு நாள், ஒரு கடையில் மிகப் பெரிய டைம் பீஸ் ஒன்றை ஷோ கேஸில் தொங்க விட்டிருந்தார்கள். அதை வாங்கிக் கொண்டு போய் சென்னையில் என் அலுவலக அறையில் வைக்க ஆசைப்பட்டேன்.

கடைக்காரரோ, ''இல்லை... இது விற்பனைக்கு அல்ல... ஷோ பீஸாக வைத்திருக்கிறோம்'' என்றார்.

ஓடாத 'ஷோ' பீஸாக இருந்தாலும், அதன் சைஸ், வடிவமைப்பு, நேர்த்தி எல்லாம் என்னை மிகவும் கவர்ந்தன.

மறு நாள் அதே கடைவழியாக வாக்கிங் சென்று கொண்டிருந்தபோது, அந்தக் கடைக்காரர் என்னை அழைத்தார்.

''நீங்கள் இந்தக் கடிகாரத்தை மிகவும் விரும்புவதால், நான் விற்பதற்குச் சம்மதிக்கிறேன். விலை ஆயிரம் ரூபாய்'' என்றார்.

''ரொம்ப அதிகம்'' என்று சொல்லி விட்டுக் கிளம்பினேன்.

மறுநாள் அதே வழியாகப் போனபோது, 'எழுநூற்றைம்பது கொடுத்து விட்டு எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

''அதிகம்'' என்றேன்.

மூன்றாம் நாள் கடிகாரத்தின் விலை ஐந்நூறு ஆனது.

இப்படி அந்தக் கடைக்காரர் தினமும் விலையைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டே வந்தார்.

''இருநூற்றைம்பது ரூபாய் என்றால் வாங்கிக்கொள்கிறேன்'' என்று கடைக்காரரிடம் சொல்லி விட்டு, 'அப்படித் தந்தால் வாங்கிக் கொண்டு வா' என்று என் உதவியாளர் மலையப்பனிடம் சொல்லி விட்டு, 'வாக்கிங்'கைத் தொடர்ந்தேன்.

நாங்கள் தங்கியிருந்த அபித் தாஜ் ஹோட்டல் அறைக்குப் போய்ச் சேர்வதற்குள், அந்தக் கடிகாரம் அங்கே வந்து சேர்ந்திருந்தது.

அதன்பின் பார்த்த போதுதான் அது வெறுமனே ஓடாத 'ஷோ பீஸ்' கடிகாரம் அல்ல, பக்காவாக ஓடும் கடிகாரம் என்று புரிந்தது. அது ஓடும் கடிகாரம் என்று தெரிந்திருந்தால், நான் ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்கியிருந்தாலும் வாங்கியிருப்பேன்.

சென்னையில் ரொம்ப நாள் என் அறையில் அது அனைவரையும் கவர்ந்து வந்தது.

ஒரு நாள் என் மருமகள் நித்யா குகனிடம் ''நீ வேண்டுமானால் இதைக் கொண்டு போய், நமது ஏவி.மெய்யப்பன் மெட்ரிகுலேஷன் மேல்நிலைப் பள்ளியில் உனது அறையில் (நித்யா அப்பள்ளியின் தாளாளர்) வைத்துக் கொள்'' என்றேன்.

ரொம்பவும் சந்தோஷமாக இச் செய்தியை தன் கணவர் குகனிடம் சொல்லப் போய், ''இதை நானே அப்பாவிடம் கேட்க வேண்டும் என்று ரொம்ப நாளா நினைத்திருந்தேன். அந்தக் கடிகாரம் எனக்குத்தான்'' என்று அடம் பிடித்தார். இப்போது அது அவரது அறையில் கம்பீரமாக அமர்ந்திருக்கிறது.

(தொடரும்)

# எச்சரிக்கை தேவை!




இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு அன்னிய முதலீடு ஓரளவு தேவைதான். ஆனால் அந்த அன்னிய முதலீடு, நம் பொருளாதார சுதந்திரத்தை எந்த விதத்திலும் கட்டுப்படுத்தும்படியாக இருக்கக் கூடாது.

**முதலீடு 1 :**

வெளி நாட்டிலுள்ள தொழில் நிறுவனங்களை நம் நாட்டில் முதலீடு செய்ய அழைக்கும்போது, அந்த வெளிநாட்டுத் தொழில் நிறுவனங்கள் எந்தெந்தத் துறைகளில் முதலீடு செய்யலாம் என்று ஆராய்ந்து முடிவு எடுக்கிறார்கள். அப்படி வரும் லாபத்தை தங்கள் நாட்டுக்கு எடுத்து கொண்டு செல்ல சிக்கல் எதுவும் இருக்க கூடாது என்று யோசிப்பது இயற்கை. லாபம் எதுவும் வராது என்ற நிலையில், நம்மை திரும்பிக்கூட பார்க்க மாட்டார்கள்.

அதனால் வெளிநாட்டுத் தொழில் நிறுவனங்களிலிருந்து இந்தியாவில் முதலீடு என்று வரும்போது, நாமும் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

**முதலீடு 2 :**

வெளிநாட்டு முதலீட்டு நிறுவனங்கள் நமது பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்வது லாப நோக்கில் பங்குகளை விற்று, அந்தப் பணத்தை திரும்ப அன்னியச் செலாவணியாக எடுத்துக் கொண்டு போகும்போது, அந்த அளவுக்கு நமது அன்னியச் செலாவணியும் குறையும். பண வீக்கம் உண்டாகும்.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது, இந்தியாவில் தனியார் வங்கிகளில் வெளிநாட்டு முதலீட்டுக்கு அவசியம் இல்லை என்பதை நன்கு உணரலாம். பசிதம்பரத்தின் இந்த யோசனைக்கு ரிஸர்வ் வங்கியின் அங்கீகாரம் கிடைக்கவில்லை என்று ஒரு செய்தி.)

அதே சமயத்தில் ப. சிதம்பரத்தின் இன்னொரு முக்கியக் கருத்தையும் கவனிப்போம். அரசு உடைமையாக்கப்பட்ட வங்கிகள் ஒன்றோடொன்று சேர்ந்து ஒரு பெரிய வங்கியாக உருவாகும் போது, அந்த ஒன்று சேர்ந்த வங்கியின் செயல்பாடு இன்னும் நன்றாக இருக்கும் என்பதுதான். இது முற்றிலும் உண்மை. இதை மனத்தில் கொண்டு பேங்க் ஆப் இந்தியாவும், யுனைடட் பேங்க் ஆப் இந்தியாவும் ஒன்றாகச் சேர முயற்சிகள் நடப்பதாகவும், அதற்கு ரிஸர்வ் வங்கியின் அனுமதி கிடைத்துவிட்டது என்றும் ஒரு செய்தி வெளியாகி இருக்கிறது இந்த முயற்சியை நாமும் வரவேற்போம்.

**பங்குச் சந்தை டிப்ஸ் :**

*2004* போலவே *2005*லும் பங்கு மார்க்கெட் சூடு பிடித்து பல பங்குகளின் விலை ஏறலாம். எதற்கும் *2005* பிப்ரவரி *28*ல் மத்திய அரசு சமர்ப்பிக்கும் பட்ஜெட்டைப் பார்த்த பிறகுதான் உறுதியாகச் சொல்ல முடியும். ஆனால் இடைப்பட்ட காலத்தில் கீழ்க்கண்ட வங்கிகளின் பங்குகளை தைரியமாக வாங்கலாம்.

பஞ்சாப் நேஷனல் பாங்க், பரோடா பாங்க், தினா பாங்க், ஓரியண்டல் பாங்க், எச்.டி.எஃப்.சி. பாங்க், கார்ப்பரேஷன் பாங்க்.

**- வி. கோபாலன்**



## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

'**வி**ச்வம்' என்பது ரிக் வேத மந்திரத்தின் பொருளாக அமைந்திருக்கிறது.

முதல் வேதமான ரிக் வேதமானது, அவனை 'விச்வம் விச்வம்' என்று கொண்டாடுகிறது. 'சர்வமாகக் காட்சியளிக்கும்படியான எம்பெருமானை நீ உபாஸனை பண்ணு' என்கிறது ரிக் வேதம்.

விஷ்ணு என்ற அடுத்த நாமம் யஜுர் வேதத்தினுடைய ஸாரமாக அமைந்திருக்கிறது. எங்கேயும் இருந்து கொண்டே, எல்லாவற்றையும் ரக்ஷிப்பவன் விஷ்ணு என்கிறது யஜுர் வேதம் :

'யக்ஞம் பாஹி
யக்நபதிம் பாஹி
மாம் பாஹி'

- யக்ஞத்தையும், யக்ஞம் செய்பவரையும், என்னையும் காப்பாற்று! என்று பொருள்.

'எல்லோருக்கும் தாயாகி, தந்தையாக இருக்கும்படியான எம்பெருமானே' என்று சொல்லி, 'எனக்கும் தாயாய் இருக்கக் கூடியவனே' என்று பிரார்த்திக்கிற மாதிரி வேதமானது பிரார்த்திக்கச் சொல்கிறது : அத்வர்யுவானவர் வேதத்திலே சொல்கிறார் - 'யக்ஞத்தை நடத்தக் கூடிய இவரை ரக்ஷிக்க வேண்டும்; என்னையும் ரக்ஷிக்க வேண்டும்; இந்த யக்ஞத்தையும் ரக்ஷிக்க வேண்டும்' என்று பிரார்த்திக்கிறார்.

அவன்தான் ஸர்வதா ரக்ஷகன்; ஸர்வத்ர ரக்ஷகன் - திரடமாய் இதை யஜுர் வேத சப்தமும், விஷ்ணு என்ற நாமாவும் எடுத்துக் காட்டுகின்றன.

**அ**டுத்தது விசேஷமாக உத்கீதம் என்கிற ஸாம வேதம். உத் என்றால் உத்தம என்று பொருள்.

'பரமாத்மா ஸர்வத்தையும் தாங்கக் கூடியவன்' என்கிறது பகவத் கீதை. அவனே உத்தமன். 'உது' என்றால் மஹாலக்ஷ்மி. 'உத்' என்கிற ஸாமத்தினாலே சொல்லப் படக்கூடியவள் மஹாலக்ஷ்மி. ஸாமம் என்ன சொல்கிறது, "மஹாலக்ஷ்மி எல்லாவற்றையும் தன் வசம் உடையவள். அவளைப் பிரார்த்தனை பண்ணு..." என்கிறது. வஷட்கார சப்தத்தினாலே இந்த ஸாம வேதமானது சொல்லப்படுகிறது.

அதர்வண மஹா மந்திரத்திலே, நாத ரூபியாய் இருந்து பரமாத்மா ஸமஸ்தத்தையும் நடத்துகிறான் என்று காட்டப்படுகிறது - பூத பவ்ய பவத்ப்ரபு:

ஆகையினாலே முதல் நான்கு திருநாமங்கள், நான்கு வேதங்களின் ஸாரம்.

'**அ**க்னி; ஏவ விச்வம்' என்கிறது வேதம். 'தத்' என்ற சப்தத்தினாலே அக்னி சொல்லப்படுகிறது. 'தது' என்ற சப்தத்தினால்

# குறையொன்றுமில்லை



விச்வம் என்ற பொருளும் சொல்லப்படுகிறது. 'தது' என்ற சப்தத்தினால் ஸவிதா - சூரியன் சொல்லப்படுகின்றான்.

தத்ஸவிது: என்று காயத்ரியானது ஆரம்பிக்கிறது. (ஸவிதா-சூரியன்) சூரியனை தியானம் பண்ணி காயத்ரி ஆரம்பிக்கிறது. சூரியன் என்றால் இப்போது நமது கண்ணுக்குத் தெரியக் கூடிய சூரியன் அல்ல. சூரிய மண்டலத்தில் உறையும் லக்ஷ்மியோடு கூடியவனான அந்த பரமாத்மாவான எம்பெருமானைக் கொண்டாடுகிறது. சாந்தோக்ய உபநிஷத் இப்படிக் கொண்டாடுகிறது.

சூர்ய மண்டலத்தில், உயர்ந்த தாமரைப் புஷ்பம் போன்ற திருநேத்திரத்தையுடைய எம்பெருமான் அமர்ந்திருக்கிறான். யோகிகள் எல்லோரும் அவனை சூர்ய மண்டலத்தில் அவ்வாறு கண்டு தியானம் பண்ணுகிறார்கள்.

நீண்ட தாமரையானது நீர் வாஸத் தடத்திலே கதிரவன் உதித்தவுடனே, அவன் ஒளிக்கிரணம் பட்டவுடனேயே மலர்கிறதல்லவா... அப்படித் தாமரைப் புஷ்பமானது மலர்ந்தால், எவ்வளவு சோபாயமானமாய் இருக்குமோ, 'அந்த அன்றலர்ந்த செந்தாமரையினையும் வென்றிருக்கும் திருமுக மண்டலம், திருநேத்திரம் பகவானுக்கு.

அப்படிப்பட்ட செந்தாமரை முகத்தை உடையவன்...

'பங்கயர்க்கண்ணன் என்கோ' என்கிறார் ஆழ்வார். 'பவளச்செவ்வாயன் என்கோ! அங்கதிரடியன் என்கோ! அஞ்சன வண்ணன் என்கோ!'

அங்கண் இரண்டும் கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல்! எங்கள் மேல் சாபம் இழிந்தேலோர் எம்பாவாய்!

விசாலாக்ஷம் எம்பெருமானுக்கு - 'பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே!" என்கிறார்.

பெரிய திருநேத்திரம், விசாலமான திருநேத்திரம் பகவானுக்கு. அன்றலர்ந்த செந்தாமரையை வென்று நிற்கும்படியான திருநேத்திரம். அப்படிப்பட்ட திருநேத்திரத்தோடு சூர்யமண்டலத்திலே பிரகாசிக்கிறவனைத்தான் காயத்ரியால் உபாசிக்கிறோம்.

ஆகவே விச்வ சப்தத்தினால் சொல்லப்படக் கூடியவன் இந்த தத்ஸவிதாதான். தத் சப்த வாச்யபூதனான சூர்ய மண்டலச் சக்கரவர்த்தி அவன்.

'தஸ்ய பாஸா ஸர்வ மிதம் விபாதி' என்று உபநிஷத் எடுத்துக் காட்டிற்றே... அந்த உத்தமோத்தமன் அவன். எவன் இருக்கும் இடத்திலே சூர்யனோ அக்னியோ விலை செல்லாதோ,

எல்லா ஜோதிஸ்களுக்கும் ஜோதிஸாக எவன் இருக்கிறானோ,

ஒளிப்பிழம்பாக எவன் இருக்கிறானோ - அவனே தத்ஸவிதா என்று எடுத்துக் காட்டுகிறது வேதம்.

ஆகவே காயத்ரி மந்திரத்தில் விளங்கக் கூடிய தத்ஸவிது: என்பது விச்வம் என்கிற சப்தத்தினால் சொல்லப்படுகிறது.

அப்படிப்பட்டவனை நீ வரிக்க வேண்டும் என்கிறது வேதம். அப்படிப்பட்டவன்...? யார் அவன்?

விஷ்ணுர் வசிஷ்ட: வரதோ வரேண்ய:

வரேண்யம் (வரிக்கப்படவேண்டியவன்) என்கிற உயர்ந்ததான வாக்கியத்தின் பொருளை, பராசர மஹரிஷி எடுத்துக் காட்டுகிறார். யாரை நாம் வரிக்க வேண்டும் என்றால், விஷ்ணுவை வரிக்க வேண்டும். அந்த் விஷ்ணுதான் பிரதம வாக்கியத்திலே, ரிக் வேத வாக்கியத்திலே எழுந்தருளியிருக்கிறான். அப்படிப்பட்ட ரிக் வேத சப்த வாச்யபூதனானவ்ன், உயர்ந்த காயத்ரி மந்திரத்தின் பிரதிபாத்ய தேவதையாக விளங்கக் கூடியவன். அவனை தியானம் பண்ணக்கூடியவர்களுக்கு ஞானத்தை - அதாவது அசங்குசித ஞானத்தை - சங்கோசம் (குறைதல்) இல்லாத தெளிவான ஞானத்தை - பரமாத்மா உண்டு பண்ணுகிறான். எனவே ஞானப்பிரதமான சொல் 'வரேண்யம்.'



விச்வம் என்று சொன்னாலே காயத்ரி மந்திரம் அதிலே உள்ளடங்கியிருக்கிறது.

விச்வம் என்று சொல்வதால் என்ன கிடைக்கிறது...? நல்ல ஞானமானது நமக்குக் கிடைக்கிறது.

விஷ்ணு: விச்வ சப்தேன உச்சதே - விச்வ சப்தமானது விஷ்ணு என்று உச்சரிப்பதன் பலனைத் தரும்.

விச்வம் விஷ்ணுர் வஷ்டகார: பூத பவ்ய பவத்ப்ரபு: என்பதன் மூலம், வியாபக மந்திரமானது சொல்லப்படுகிறது.

வியாபக மந்திரம் என்றால் எது?...

**நாராயணாய வித்மஹே**
**வாஸுதேவாய தீமஹி**
**தன்னோ விஷ்ணுர் ப்ரசோதயாது.**

விஷ்ணு காயத்ரியிலே மூன்று மந்திரங்கள் அடங்கியிருக்கின்றன

வியாபக மந்திரம், அவ்வியாபக மந்திரம் என்று வேதத்தில் இரண்டு விதமான மந்திரங்கள் சொல்லப்படுவது உண்டு.

இதில் வியாபக மந்திரம் எது என்றால், மூல மந்திரம் - அதாவது நாராயண மந்திரம். இந்த மந்திரத்தை நன்கு உணர்ந்து, ஆசார்யரிடத்திலே உபதேசமாகப் பெற்று, யார் நன்கு உச்சரிக்கிறார்களோ, அப்படிப்பட்ட இந்த மந்திரமானது அவர்களுக்கு அமிர்தத்வத்தை உண்டுபண்ணுகிறது. மறுபடியும் பிறப்பில்லாமல் உயர்ந்த கதியை நமக்குக் கொடுக்கும் படியான மந்திரம் இது. ஆகையால் மூல மந்திரத்துக்கு ஈடு இணையே இல்லை. இதை ஒரு பாசுரத்திலே எத்தனை அழகாகச் சொல்லியிருக்கிறது பாருங்கள்:

'குலம் தரும்; செல்வம் தந்திடும்;
அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலம் தரம் செய்யும்; நீள்விசும்பு
அருளும்;
அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலம் தரும்; மற்றும் தந்திடும்; பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலம் தரும் சொல்லை நான் கண்டு
கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்!'

குலம் தரும் என்றால், பிறக்கிற குலத்தைச் சொல்லவில்லை. குலம் என்றால் தாஸ்ய குலம். நமக்கெல்லாம் தாஸ்யர்கள் என்ற உயர்ந்த குலத்தைக் கொடுக்கும் பகவான் பரன். அவனுக்கு நாம் எல்லோருமே -எக்குலத்தவரானாலும்-தாஸ்யர்கள்தான். அப்படியான தாஸ்ய குலத்திலே நம்மைச் சேர்த்து வைக்கும் நாராயண மந்திரம்.

அது மாத்திரமில்லை. அந்த நீள் விசும்பு - வைகுண்டத்தை நமக்குக் கொடுக்கும். பெற்ற தாயைக் காட்டிலும் அன்பு செய்யும்.

பெற்ற தாய் எது...? காயத்ரி மந்திரம் அதைக் காட்டிலும் நம்மிடம் அன்புடையது நாராயண மந்திரம்.

நாராயண மந்திரத்தினால் நமக்கு வளர்ச்சி என்று பெரியவர்கள் சொல்கிறார்கள்.

பிறவி காயத்ரியால் ஏற்பட்டது-தாயால் ஏற்பட்டது. அடுத்து நாராயண மந்திரத்தை உச்சரித்து, அவனுடைய அனுக்கிரஹத்தினாலே மேன்மை அடைகிறோம்.

(வளரும்)



# தாய்வீடு!

தமிழ் மக்களுக்கு நாவால் அறிமுகம் ஆகியிருந்த என்னை, பேனாவால் புகழ்பெற வைத்த பத்திரிகை 'கல்கி'. பாரம்பரியத்தைப் பாதுகாத்தபடி புதுமையும் புகுத்துவது சுலபமல்ல; கடினம்! அதனை வெற்றிகரமாகச் சாதித்திருப்பது 'கல்கி'. என்றைக்கும் புதுப்புது எழுத்தாளரை உண்டாக்கி வளர்க்கும் தாய்வீடு 'கல்கி'. எழுத்தாளன் என்பவன் பத்திரிகையை நம்பி ஜீவனம் நடத்துபவன் என்கிற நிலையை உடைத்து, பத்திரிகை அதிபராகி வெற்றிபெற முடியும் என்று அமரர் கல்கி சாதித்த சாதனையின் அடையாளம் 'கல்கி'...

எனவே... கல்கியை நேசிக்கிறேன்.

படம் : ஸ்ரீஹரி



